உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




தொகுதி 22 | தாது௵ தைமீ ௧௳ | 1937௵ ஜனவரிமீ 14௳ | பகுதி 7


## கடவுள் வணக்கம்

விமலமுதற் குணமாகி நூற்றெட்டாதி
    வேதமெடுத்து எடுத்துரைத்த விருத்திக்கேற்க
அமையும்இலக் கணவடிவாய் அதுவும் போதாது
    அப்பாலுக் கப்பாலாய் அருட்கண் ணூறிச்
சமமுடன் கலப்பும் அவிழ்தலுமியாங் காணத்
    தண்ணருள்தந்து எமைக்காக்குஞ் சாட்சிப்பேறே
இமையளவும் உபகார மல்லால் வேறொன்று
    இயக்காதிர்க் குணக்கடலா யிருந்த தொன்றே. (1)

வடிவனைத்துந் தந்தவடி வில்லாச் சுத்த
    வான்பொருளே எளியனேன் மனமா மாயைக்
குடிகெடுக்கத் துசங்கட்டிக் கொண்ட மோன
    குருவேஎன் தெய்வமே கோதிலாத
படியெனக்கு ஆனந்தவெள்ளம் வந்து தேக்கும்
    படியெனக்கு உன் திருக்கருணை பற்றுமாறே
அடியெடுத்துஎன் முடியில்இன்னம் வைக்க வேண்டும்
    அடிமுடியொன் றில்லாத அகண்ட வாழ்வே. (2)

காணுங் கண்ணிற் கலந்தகண் ணோடுனைச்
சேணும் பாருந் திரிபவர் காண்பரோ
ஆணும் பெண்ணும் அதுவெனும் பான்மையும்
பூணுங் கோலம் பொருந்தியுன் நிற்கவே. (3)

அகமேவும் அண்ணலுக்குஎன் அல்லலெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய்ச் சுகங்கொடுவா பைங்கிளியே. (4)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் இறைவனது பரத்துவத்தை எடுத்துக் காட்டுகிறார்.

(இ-ள்.) நிர்மல முதலிய குணங்களையுடையதாகி, வேதங்களும் நூற்றெட்டுவித உபநிஷதங்களும் அவற்றிற்கு மேற்பட்ட உபநிஷதங்களும் எடுத்துக்கூறிய வியாக்கியானத்துக்கு ஏற்ப அமைந்திருக்கிற இலக்கண வடிவமாய், அத்துடன் அமையாது இவற்றிற்கெல்லாம் மேற்பட்டதாகி, திருவருளையே கண்ணாகக்கொண்டு, சமத்துவத்தோடு சேர்க்கையும் பிரிவும் நாமெல்லாம் பார்க்கும்படியாகக் கருணை புரிந்து எங்களைப் பாதுகாக்கும் சாட்சி பூதமான பேறே! இமைகொட்டு மளவும் மன்னுயிர்களுக்கு உதவி புரிதலேயன்றிப் பிறிதொன்றைச் செய்ய விரும்பாத நிர்க்குணக் கடலாயிருக்கும் ஒப்பற்ற பொருளே! (எ-று.)

வேதம் உபநிஷதம் முதலிய விழுமிய நூல்கள்கூட ஆண்டவன் இன்ன விதமாய்த் தானிருப்பான் என எடுத்துக்கூற முடியாதென்பார், "நூற்றெட்டாதி வேதமெடுத்து எடுத்து உரைத்த விருத்திக்கேற்க அமையும் இலக்கண வடிவாய் அதுவும் போதாது அப்பாலுக் கப்பாலாய் அருட் கண்ணாகி' என்று கூறினார். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையுங் கடவுள் இயற்றுவது உயிர்களின் நன்மையை உத்தேசித்தே என்பதை விளக்குவார், "இமையளவும் உபகாரமல்லாமல் வேறொன்று இயக்கா நிர்க்குணக் கடலாய் இருந்த ஒன்றே" என்றுங் கூறினார்.

2. இதனால் திருவடி தீட்சை செய்ய வேண்டுமென கடவுளை நோக்கி முறையிடுகிறார்.

(இ-ள்.) ஜீவராசிகளைப் படைத்த அரூபமான பரிசுத்த விழுப்பொருளே! அடியேனுடைய மனதில் நிகழும் மாயையின் கூத்தை யொழிக்க துவஜங் கட்டிக்கொண்ட மௌன குருவே! என் ஆண்டவனே! அடியுமுடியுமில்லாத அகண்ட சொரூபமான வாழ்வே! அடியேனுக்கு குற்றமில்லாத மகிழ்ச்சிப்பெருக்கு ஏற்படுமாறு எனக்கு உன்னுடைய திருவருள் பதியும்படி உனது திருவடிகளை யெடுத்து என் தலையின்மீது இப்போது வைக்க வேண்டும். (எ-று.)

3. இதனால் ஆண்டவனை அந்தர்முகமாகக் காண முயலாது, பகிர்முகமாகப் பார்க்கப் பாடுபடுவதில் பயனில்லை எனக் கூறுகிறார்.

(இ-ள்.) ஊடுருவி நோக்குகின்ற அறிவாகிய கண்களில் கலந்திருக்குங் கண்மணியே! ஆண்பாலும், பெண்பாலும் அதுவென்னுந் தன்மையும் ஆகிய இவைகளைக்கொண்ட உன் திருக்கோலமானது பொருந்தி அவர்களது மனத்தினிடத்து நிலைபெற்றிருக்கச் செய்தே, உன்னை விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் தேடித் திரிபவர்கள் காண்பார்களோ. (எ-று.)

4. இதனால், தன்னிலையைக் கூறும்படி கிளியைத் தூது விடுகிறார்.

(இ-ள்.) பைங்கிளியே! மனதில் குடிகொண்டிருக்கும் அண்ணலுக்கு என்னுடைய துயரத்தையெல்லாஞ் சொல்லிக் கிளியாகிய நீ போய்ச் சுகங்கொண்டு வருவாயாக. (எ-று.)




# பெய்ஸ்பூரில் தேசியத் திருவிழா





நமது தாய் நாடாகிய இந்தியாவில் பலவித திருவிழாக்கள் நடைபெறுகின்றன. இத் திருவிழாக்கள் பெரும்பாலும் சமய சார்பாகவும், கடவுள் பெயராலுமே நடந்து வருகின்றன. சமய சம்பந்தமான திருவிழாக்கள் தேச மக்கள் அனைவராலும் கொண்டாடப் படுவதில்லை. ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு பகுதியினரால் ஒவ்வொரு திருவிழா கொண்டாடப் படுகின்றது. ஏனென்றால், இந்தியாவில் பலவித சமயங்களும், மதக் கொள்கைகளும் நிலவி யிருக்கின்றன. ஆகவே, அந்தந்த சமயத்தையுங் கொள்கையையும் உடையவர்களால் அவைகளை யொட்டிய திருவிழாக்கள் கொண்டாடப் படுகின்றன.

உதாரணமாக, இந்துக்கள் கொண்டாடுகிற தீபாவளித் திருவிழாவையோ, பொங்கல் திருவிழாவையோ இந்தியாவிலேயே வசிக்கும் முஸ்லீம் மக்களோ, கிறிஸ்துவ மக்களோ கொண்டாடுவதில்லை; முஸ்லீம்கள் கொண்டாடுகிற ரம்ஸான் பண்டிகையையோ, குத்பா பண்டிகையையோ இந்துக்களும், கிறிஸ்தவர்களும் கொண்டாடுவதில்லை. கிறிஸ்தவர்கள் கொண்டாடுகிற கிறிஸ்துமஸ் பண்டிகை போன்ற பண்டிகைகளை இந்துக்களும், முஸ்லிம்களும் கொண்டாடுவதில்லை. இவ்விதமே மற்ற மதத்தினரும் நடந்து கொள்ளுகின்றனர்.

இந்தியாவில் வசிக்கும் பலதிறப்பட்ட மக்களும் ஒருங்கே கொண்டாடும் திருவிழா ஒன்று உண்டென்றால், அது தேசியத் திருவிழாவேயாகும். தேசத்தை யொட்டிய திருவிழாவை அத் தேசத்தில் உள்ள எல்லா மக்களுங் கொண்டாடுவதற்கு உரிமையிருக்கிறதல்லவா!

தற்போது நம் இந்தியமக்கள் கொண்டாடுவதற்குரிய தேசியத் திருவிழா எது? அதுதான் தேச மகாசபையாகிய காங்கிரஸின் வருஷக் கொண்டாட்ட திருவிழாவாகும். காங்கிரஸ் மகாசபை

யொன்றுதான் அது தோன்றியதி லிருந்து இதுவரை நம் நாட்டு மக்களின் சுதந்திரத்துக் காகவும், நாட்டு விடுதலைக்காகவும் பாடுபட்டு வருகிறது. ஆகவே, அம் மகாசபை யொன்றே தேச மகாஜனங்கள் ஒவ்வொருவருக்கும் பிரதிநிதித்வம் வாய்ந்த சபையாகும். அத்தகைய மகாசபையின் வருடக் கொண்டாட்டத்தைத் "தேசியத் திருவிழா" என்று கூறுவதில் தடையென்ன?

சுமார் ஐம்பது வருஷங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட காங்கிரஸ் தேசியத் திருவிழா, கால தேச வர்த்தமானங்களுக் கிணங்க, பலமடைந்து இதுவரை சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வந்திருக்கிறது. இத்தனை வருஷங்களாகப் பெரும்பாலும் நகரங்களிலேயே கொண்டாடப்பட்டு வந்த இத் தேசியத் திருவிழா, இவ்வருஷம் மஹாராஷ்டிரத்தின் ஒரு பகுதியிலுள்ள சிறு கிராமமாகிய பெய்ஸ்பூரில் வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இதில் சாதி சமய வேற்றுமையின்றி இந்தியாவிலுள்ள எல்லா மக்களும் கலந்து கொண்டனர். எனவே, பெய்ஸ்பூர் காங்கிரஸ் தேசியத் திருவிழா அதிக விமரிசையாக நடைபெற்றதென்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது?

காங்கிரஸ் மகாசபையின் 50-வது கூட்டம் டிசம்பர் மாதக் கடைசி வாரத்தில் பெய்ஸ்பூரில் கூடியது. அம் மாபெருங் கூட்டத்துக்கு இந்தியாவின் இணையற்ற வீரரும், சுதந்தர புருஷருமாகிய பண்டித ஜவஹர்லால் நேரு மூன்றாவது முறையாகத் தலைமை வகித்தார். இவ்விதம் காங்கிரஸுக்கு மும்முறை தலைமை வகிக்கும் பாக்கியம் கோபாலகிருஷ்ண கோகலேவுக்குப் பின் பண்டித ஜவஹர்லால் நேருவுக்குத்தான் கிடைத்தது. அதுவும், தொடர்ந்தாற்போல் இரு வருஷங்கள் தலைவராக இருக்கும் பேறு பண்டித நேருவுக்கே உரியதாயிற்று. பிரிட்டிஷ் சர்க்காரால் இந்தியாவுக்கு வழங்கப்பட்டிருக்கும் புதிய அரசியல் சீர்திருத்தம் அமுலுக்கு வரவிருக்கும் இந் நெருக்கடியான சமயத்தில் பண்டிதநேரு தலைமை வகிப்பது மிகவும் பொருத்தமுடையதாகும். அத்துடன், காங்கிரஸிலேயே பல திறப்பட்ட கொள்கையுடையோருங் கலந்திருப்பதால், அவர்களை யெல்லாம் ஒன்றுபடுத்திக் காங்கிரஸின் முன்னணி வேலையை முட்டின்றி நடத்தி வைக்கும் ஆற்றலும் பண்டிதருக்குண்டு. இதை யெல்லாம் உத்தேசித்துத்தான் தேசமக்களும், தலைவர்களும் ஏகமனதாகப் பண்டிதரைத் தேர்ந்தெடுத்து பெய்ஸ்பூர் காங்கிரஸில் தலைமை வகிக்கச் செய்தனர். மகாத்மா காந்திக்கு அடுத்தபடியாக, இந்தியவிடுதலைப் போராட்டத்தைத் திறமையாக நடத்த ஆற்றலுடைய தலைவரெனக் கருதப்படுபவரும், உலகமக்களின் உள்ளங்களைக் கவர்ந்திருப்பவரும், அவர்களால் மேலாக மதிக்கப்படுபவரும் நமது பண்டிதநேருவே யாவர்.

பண்டிதநேரு பொதுவாக இந்தியா விடுதலை யடைய வேண்டு

மென்பதிலும், இந்தியமக்கள் சகல துறைகளிலும் முன்னேற்ற மடைந்து சுகவாழ்வு பெறவேண்டுமென்பதிலும் மிகுந்த ஆர்வமுடையவர். ஆயினும் அவர் பெரும்பாலும் நகரமக்களிடையே பழகிவந்தவராதலால் நகரங்களுக்கு ஜீவநாடிகளாய் இருக்கும் கிராமங்களின் நிலைமையையும், அங்கு வாழும் கிராமமக்களின் கஷ்ட நஷ்டங்களையும், வறுமை நிலையையும் உள்ளவாறு அறிவதற்கு அவருக்குச் சந்தர்ப்பங் கிடைத்ததில்லை. ஆகையால்தான், அவர் மகாத்மா ஆரம்பித்த சுதந்திரப் போராட்டத்தால் விழிப்படைந்த வீரரா யிருந்தும், காந்தியடிகள் கிராமங்களிலுள்ள ஏழை விவசாயிகளின் வறுமை நிலையை ஒருவகையில் போக்குவதற்காக வகுத்த கதர் முதலிய வேலைத்திட்டங்களில் மாறுபட்ட அபிப்பிராய முடையவரா யிருக்கிறார். சில சமயங்களில் தம் கருத்து வேற்றுமையை வெளிப்படையாகவுங் கூறிவிடுகிறார். மேனாட்டுச் சமதர்மக் கொள்கையில் அவருக்குள்ள பெருநம்பிக்கையே அதற்குக் காரணமாகும். சமதர்மக் கொள்கையால்தான் மனித சமூகத்துக்கு நன்மை யேற்படுமென்று மற்றுஞ் சில அறிஞர்கள் கருதுவதுபோல் பண்டிதரும் அபிப்பிராயப்படுகிறார். அவ்வாறு அவர் கருதுவதில் தவறில்லை. ஆனால், மேனாட்டு (முக்கியமாக ருஷிய)ச் சமதர்மக் கொள்கை கிரியாம்சையில் நம் இந்தியாவைப் பொருத்தமட்டில் எவ்வளவு தூரம் வெற்றிபெறும்—அநுபவ சாத்தியமாகும்—என்பதை அறிய பண்டிதர் போன்றவர்களுக்குச் சந்தர்ப்ப மேற்படவில்லை. அவர்கள் இன்னும் பிரசாரஞ் செய்யும் அளவிலேயே இருந்து வருகின்றனர்.

பண்டித ஜவஹர்லால் சென்ற வருஷம் இரண்டாவது முறையாக லக்ஷ்மணபுரியில் தலைமை தாங்கியதற்குப் பிறகு, இந்தியா முழுவதும் அவர் சுற்றுப்பிரயாணஞ் செய்திருக்கிறார். அதற்கு முன்னரும் இரண்டொரு தடவை இந்தியாவைச் சுற்றிப் பார்த்திருக்கிறாராயினும், இம்முறைதான் அவருக்கு இந்தியாவின் ஒவ்வொரு சிறு கிராமத்தையும், மூலை முடுக்கையும் சுற்றிப்பார்த்து, ஆங்காங்குள்ள மக்களிடையே இருந்து பழகி அவர்களது நிலைமையை அறிந்து கொள்ளுவதற்குச் சந்தர்ப்பம் வாய்த்தது. நகர மக்களைவிட கிராமமக்கள் காங்கிரஸ் செய்தியை எவ்வளவு ஆவலோடு கேட்டிருக்கிறார்களென்பதையும், அங்கெல்லாம் காந்தியம் எவ்வளவு தூரம் பரவி யிருக்கிறதென்பதையும் பண்டிதர் நன்கு அறிந்திருக்கிறார். அத்துடனில்லாது, மகாத்மா காந்தியின் கட்டளைப்படி இவ்வருஷத்திய காங்கிரஸ் கூட்டம் மிகச் சிறிய கிராமமாகிய பெய்ஸ்பூரில் கூடியதாலும், அக் கூட்டத்துக்கு நகர மக்களைவிட கிராமமக்களே பல்லாயிரக் கணக்காகத் திரண்டிருந்ததாலும், மேலும் பண்டிதருக்குக் கிராம ஏழைமக்களின் பரிதாபகரமான நிலைமையைப் பூரணமாக அறிவதற்கு வசதி ஏற்பட்டது. எனவே, பண்டிதர் இந்திய ஏழை விவசாயிகளின் வறுமைக்குக் காந்தீயம் விமோசன முண்டாக்குமா? அல்லது சமதர்மக் கொள்கை

விமோசன முண்டாக்குமா? என ஆராய்ந்து பரிசீலனை செய்து பார்ப்பாரென நாம் எதிர் பார்க்கிறோம்.

எவ்வாறிருந்தாலும் பண்டித ஜவஹர்லாலின் சமதர்மக் கொள்கையில் ஒருவித அதிர்ச்சி யேற்பட்டிருக்கிறது என்று இங்கு எடுத்துக் கூற விரும்புகிறோம். அவர் பெய்ஸ்பூரில் நிகழ்த்திய தலைமைப் பேருரையில், உலக (சர்வ தேச) நிலைமையையும் ஆராய்ந்து கூறிக் கொண்டே வந்து, பின் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:—

"வறுமையையும் வேலை யின்மையையும் ஒழித்துவிட வேண்டும். மனித வர்க்கத்தின் நலத்திற்கான வழிகளில் நம் மக்களது சக்தியைத் திருப்பவேண்டும். இன்றுள்ள ஏற்பாட்டை யகற்றிப் புதிய ஏற்பாட்டை நிலவச் செய்ய வேண்டும். சென்ற எட்டுமாத காலத்தில் இப்பெரிய நாடு முழுவதையும் நான் சுற்றுப்பிரயாணஞ் செய்திருக்கிறேன். இந்தியாவிலுள்ள போது மக்கள் துன்பத்தால் துடிப்பதை நான் நேரில் கண்டேன். தங்கள்மீது சுமந்திருக்கும் பளுவைத் தாங்கமாட்டாது அவர்களுடைய கண்கள் பரிகாரத்தைக் கோரிப் பரிதாபகரமாக நோக்குகின்றன. எனவே, அவர்கள் வேண்டும் பரிகாரத்தை முதலில் தேட வேண்டியதே நம்முடைய தற்போதைய பிரச்சினையாக இருக்கிறது. மற்றவை அவ்வளவு முக்கியமானவையல்ல. இப் பிரச்சினையைத் தீர்க்க வேண்டுமானால் இந்தியாவில் ஏகாதிபத்திய ஆதிக்கத்தையும், சுரண்டலையும் அகற்றவேண்டும்...........

"ஏகாதிபத்திய வாதம், சமதர்மவாதம் ஆகியவற்றின் தத்துவங்களை உணராமல் நம் நாட்டுப் பிரச்சினைகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது. நம் துயரங்கள் ஆழப் பதிந்துபோயிருக்கின்றன. தீவிரமான சிகிச்சையால் தான் அத்துயரத்தைப் போக்க முடியும். சமதர்ம முறையில் சமூகத்தைத் திருத்தியமைப்பதே அந்தச் சிகிச்சையாகும்."

"நாம் இன்று இந்தியாவில் சமதர்மத்துக்காகப் போராடவில்லை, நிலைமை வெகுதூரம் அபிவிருத்தி யடைந்த பின்னர்தான் சமதர்ம முறையில் நாம் காரியங்களைச் செய்யக்கூடும். ஆனால் நமது தற்போதைய பிரச்சினை யென்ன? வரப்போகும் சுயராஜ்யம் எத்தகையதாக இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள அபேதவாதத்தைப் பற்றிய அளவு உதவியாக இருக்கும்.

"பிரச்சினையைச் சரியாக உணர்ந்து கொள்ளாவிட்டால் முயற்சிகள் வீணாகும். இன்று ஜனநாயக அரசியலுக்காகவே காங்கிரஸ் போராடுகிறது. சமதர்மத்துக்காக அல்ல. காங்கிரஸ் சாம்ராஜ்ய வாதத்தை எதிர்த்து அரசியல் பொருளாதார அமைப்பில் பெருத்த மாறுதலைக் கோருகிறது. இது படிப்படியாக சமதர்மத்தில் முடிவுறும். சமதர்மமே இந்தியாவின் நோய்க்கு மருந்து.

"ஆனால் இப்போது நமக்கு உடனே வேண்டுவது அரசியல் சுதந்திரமும் ஜனநாயக அரசியலுமாகும். ஆகவே, உலகில் முன்னேற்ற நோக்கங்களுடன் உழைக்கும் கோஷ்டிகளுடன் காங்கிரஸ் சேர்ந்து கொள்ள வேண்டும். உலக சமாசத்தை நாம் ஆதரிக்க வேண்டும்."

இப் பகுதியைக் கூர்ந்து கவனிப்பவர்கள் நாம் முன்னர் எடுத்துக் காட்டிய உண்மையை நன்குணர்வார்கள்.

மற்றப்படி, பண்டிதர், காங்கிரஸ் புதிய இந்திய அரசியலைத் தகர்க்கவே முனைந்து நிற்கிறதென்றும், அதிலும், முக்கியமாகச் சமஷ்டி முறையைத் தவிடுபொடியாக்கத் தயாராக இருக்கிறதென்றும், அதற்காகவே அது மாகாணச் சட்டசபைகளுக்கு நடக்கும் பொதுத் தேர்தலில் கலந்து கொள்ளுகிறதென்றும் வெகு தெளிவாக எடுத்து விஸ்தரித்திருக்கிறார். அத்துடன், அவர் வயதுவந்த அனைவருக்கும் ஓட்டுரிமை தந்து மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணயசபை ஏற்படவும் உழைக்கப்போவதாக உறுதி கூறியிருக்கிறார். பொதுவாக பண்டிதரது பிரசங்கம் காலத்திற்கேற்ற ஒன்று என்பதில் சந்தேகமில்லை.

இனி, இக் காங்கிரஸின் வரவேற்புக் கழகத்தலைவர் ஸ்ரீ சங்கரராவ்தேவ் வரவேற்புரையும் உணர்ச்சி வாய்ந்ததாகவே இருக்கிறது.

இக் காங்கிரஸில் ஒரு முக்கிய விசேஷமென்னவென்றால், இரண்டு வருட காலமாக அரசியலிலிருந்தே விலகியிருந்து வரும் மகாத்மாகாந்தி, இக் காங்கிரஸை யொட்டி நடைபெற்ற கிராமக் கைத்தொழிற் பொருட்காட்சிச் சாலையில் அரசியல் பிரசங்கஞ் செய்தாரும். அப் பிரசங்கம் மக்கள் உணர்ச்சியைத் தட்டி யெழுப்பக் கூடியதாக இருக்கிறது. அப் பிரசங்கத்தில் அவர் தமது வேலைத் திட்டங்களை நாட்டுமக்கள் நிறைவேற்றி வைக்காததே நாடு முன்னையினும் மிக மோசமாக இருப்பதற்குக் காரணமென இடித்துக் கூறுகிறார். அத்துடனில்லாது, "நூற்பதின்மூலம் நாம் சுதந்திரம் பெறக் கூடுமென்று உங்களுக்குக் கூறுகிறேன். உண்மையையும் அஹிம்சையையும் அடிப்படையாகக் கொண்ட மற்றொரு முறையினால் சுயராஜ்யம் பெறக்கூடுமானால் அறிந்தவர் சொல்லட்டும். அங்ஙனம் யாராவது நிரூபித்தால் நான் நூல் நூற்பதை அடியோடு விட்டு விடுகிறேன். பிறகு அது பற்றிப் பேசவே மாட்டேன். அங்ஙனம் புதிய வழி காட்டுவோருக்கு நான் அடிமையாயிருக்கிறேன்; 'நான் ஒரு பைத்தியக்காரன்' என்று பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறேன்" என அறைகூவி யழைக்கிறார். மேலும், அவர், "என்னுடைய திறமையையும் சக்தியையும் பற்றிச் சிலர் சந்தேகிக்கலாம்; இந்தக் கிழவரால் என்ன முடியுமென்று நீங்கள் நினைக்கலாம். சில வருஷங்களுக்கு முன் எனக்கு எத்தகைய சக்தியும் பலமு மிருந்தனவோ அதே சக்தியும் பலமும்

இப்பொழுதும் இருக்கின்றன. நான் சிறைக்குச் செல்ல வேண்டிய காரியம் இப்பொழுது ஏதாவது இருக்கிறதா? அது எது வென்று உடனே சொல்லுங்கள்; சிறை செல்கிறேன்; அவசியம் நேர்ந்தால் தூக்கு மேடை ஏறவும் நான் சித்தமா யிருக்கிறேன்" என்று கூறித் தம் சக்தியைப் பற்றி வீர முழக்கஞ் செய்தார். மகாத்மாவுடைய அமுத மொழியை இந்தியன் எனக் கூறிக் கொள்ளும் ஒவ்வொரு மகனும் சிந்தித்துப் பார்க்க வேண்டியது அவசியம்.

கடைசியாக இக் காங்கிரஸில் உலக சமாதான காங்கிரஸை ஆதரித்தும், பர்மா பிரிவினை விடுதலைப் போராட்டத்துக்குத் தடையாக இல்லாதவாறு பார்த்துக் கொள்ள வேண்டுமென்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகார மளித்தும் ஸ்பெயினில் நடக்கும் கலகத்துக்கு அநுதாபந் தெரிவித்தும் புயல் வெள்ளங்களால் கஷ்ட மடைந்த மக்களுக்கு உதவி புரிந்தவர்களைப் பாராட்டி அநுதாபந் தெரிவித்தும், வல்லரசுகளின் யுத்த வெறியை எதிர்த்தும், விசாரணையின்றிக் காவலில் வைக்கும் கடுமையான முறையைக் கண்டித்தும் பல முக்கிய தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

புது அரசியலை உடைக்க வேண்டுமென்றும், இந்தியாவின் அரசியலை நிர்ணயிக்க ஜனப்பிரதிநிதிச் சபையைக் கூட்டுவதென்றும், காங்கிரஸ்காரர் பதவி ஏற்பதா கூடாதா என்பதுபற்றி மாகாணக் கமிட்டிகளும், ஜில்லா, தாலூக்கா கமிட்டிகளும் முடிவு செய்து அ. இ. கா. கமிட்டிக்கு விரைவில் அனுப்ப வேண்டுமென்றும் அப்பொழுதே இவ்விஷயத்தைக் காங்கிரஸ் முடிவு செய்யக் கூடுமென்றும் ஒரு முக்கிய தீர்மானம் நிறைவேறியது. அதை ஆதரித்தும் எதிர்த்தும் பலர் பேசினர். அவர்களில் பண்டித மாளவியா, திரு. சத்திய மூர்த்தி ஆகியவர்களின் சொற்பொழிவுகள் குறிப்பிடக் கூடியனவாக இருந்தன.

பண்டித மாளவியா, "சென்ற ஐம்பது ஆண்டுகளாக நான் இந் நாட்டுக்குச் சேவை செய்திருக்கிறேன். இந்நாட்டிலிருந்தும், இவ்வுலகிலிருந்தும் நான் விடை பெற்றுக்கொள்ள வேண்டிய காலம் வந்துவிட்டது. அடிமைத் தளையினின்றும் இந்தியா விடுதலை பெறுமுன்பு, நான் இறந்து விடுவேனோ என்று நினைக்கும் போது என் உள்ளம் படும்பாட்டைச் சொல்ல இயலாது. சுதந்தர உதயத்திற்குத் தீவிரமாகப் பாடுபடும்படி என் தேசத்தார்களாகிய உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று உருக்கமாகப் பேசியிருப்பது யாவர் மனதையுங் கவருமென்பது திண்ணம். அவர் வேண்டுகோளின்படி ஒவ்வொருவரும் சுதந்தரதாகங் கொண்டு சேவை செய்ய முன் வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

ஓம்: தத்ஸத்.

# பொங்கலோ ! பொங்கல் !

("சமூகத் தொண்டன்")

அகவற்பா.

போங்கலோ போங்கல் ! கங்குலும் பகலும்
போங்கலோ போங்கல் !! போங்கலோ போங்கல் !!!
அங்கையர் கண்ணியோ டமர்ந்தருள் இறையின்
பங்கயில் அருள் இப் பாரிடைப் பொங்கவும்
தண்டமிழ் நாட்டிடை தவநெறி யோங்கவும்
மண்டலங் குளிர மாரி பொழியவும்
வாணிபத் தொழிலினர்த் தோங்குப்வே ளாண்மையால்
நாணிலங் கல மாகக் கொழிக்கவும்
அறம்வளர் மங்கையர் அன்பு சிறக்கவும்
மறமது சிதைந்து மக்கள் உய்யவும்
செந்தமி ழணங்கை திசைதொறும் தொழவும்
முந்தையோர் கண்ட முறையெலாம் சிறக்கவும்
நாவலர் பாவலர் நற்றமி ழன்பர்மற்
றேவரும் இங்கெஞ் ஞான்றும் வாழவும்
பணியே அணியாய்ப் பார்மிசை ஒளிரும்
மணியிற் சிறந்த மாது ஆனந்த
போதினி வாழவும் பொற்பினள் அவளை
எதில் குறையும் இன்றி வளர்க்கும்
தலையா சிரியன் தக்கோன் கலையில்
மலை நேர் மாதவன் இராமசாமியும்
பொற்பினள் தன்னைப் புவிமிசைப் பெற்ற
அற்புத மென்ன அளித்த திருவினன்
நாக வேடென்னும் நல்லூ ரதனில்
ஏக போகனாய் இருந்து சிறப்போன்
முனிசாமி என்னும் முதல்வன் தன்னின்
கனிமொழி மனையாள் கற்பமர் துணையொடு
பல்லூழி காலம் பாங்கொடு வாழவும்
நல்லோர்க் கென்றும் நலஞ்செய்து மகிழவும்
போங்கலோ போங்கல் ! போங்குக தாதுதைப்
போங்கலோ போங்கல் !! போங்குக உலகு.

# பொருள் நூல்

ஸ்ரீகண்ட இராமன், எம். ஏ., எல். டி.,



(411-வது பக்கத் தொடர்ச்சி.)

செல்வத்திற்கு பலசிறப்பட்ட கருத்துக்கள் இருப்பதால் எது சாலவும் சிறந்தது என்பதை நிர்ணயிக்க வேண்டும். தனிப்பட்ட செல்வம் (Individual wealth) என்று சொல்லப்புகின் அது ஒருவருடைய மூலதனத்தைக் குறிக்கும். அதற்கு உபயோகம் (Utility,) குறைந்திருத்தல், மாற்றக் கூடியது முதலான குண விசேஷங்களிருக்கும். இதில் இனும் சரக்குகளும், (Free goods) மாற்றக் கூடாத சாமான்களும் (Non-transferable goods) இதில் சேர்க்கப்படாதவை. தேசியச் செல்வம் (National wealth) என்று செல்வத்தை ஒரு தேசிய நோக்கத்தோடு பார்த்தால் அதில் மாற்றக் கூடாத சரக்குகளும், இனும் சரக்குகளும்—அமோகமாக கிடைக்கக் கூடியதுமான குண விசேஷங்கள் கூடியதைப் பார்க்கலாம்.

உதாரணமாக:—சீதோஷ்ணம், ஜலசக்தி, காவேரியாறு, நயகாரா நீர் வீழ்ச்சி, கைத்தொழில் குண விசேஷங்களை கொண்டிருக்கும் ஒரு மனிதனுடைய சக்தி முதலானவற்றை எடுத்துக்கொள்ளலாம்.

ஆல்Fரெட் மார்ஷல், செல்வத்தைப்பற்றிச் சொல்லுகையில் இரண்டு விதமாகச் சொல்லுகிறார். குறுகிய நோக்கத்தில் ஒரு மனிதனுடைய செல்வமானது, பின் வருவனவற்றைக் கொண்டிருக்கிறது.

(உ-ம்) நிலம், யந்திரங்கள், வீடுகள், கம்பெனியின் "ஷேர்"கள், அடமானக் கடன் பத்திரங்கள் முதலானவை. பரந்த நோக்கத்தில் அப்பொருளாசிரியர் மேற்கூறிய செல்வத்தில் ஒரு மனிதனைப் பொருத்த மட்டிலுள்ள குணாதிசயங்களைச் (Personal Wealth) சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று சொல்லுகிறார். அதாவது அவனுக்கு அவை செல்வம்போலிருக்கிறது.

(உ-ம்) சாமர்த்தியம், பொருளீட்டும் முறையில் சாதுர்யம், முயற்சி, யோசனை முதலானவை. செல்வத்தைப் பற்றி எலி (Ely,) டாசிக் (Taussig,) செலிக்மன் (Seligman) முதலாயினோர் பலவிதமாகக் கூறியுள்ளார்கள்.

## உலகச் செல்வம் (Cosmopolitan Wealth)

இது உலகத்திலுள்ள எல்லா செல்வங்களையும் குறிக்கும்.

(உ-ம்) கடல் உலகத்தின் சொத்தாகும். எப்படி தேசியச் செல்வம் (ஒரு தேசத்தின் எல்லா செல்வங்களும்) ஒரு நாட்டிற்கு முக்கியமாகக் கருதப்படுகிறதோ அப்படியே எல்லா தேசங்களின் செல்வங்களும் சேர்ந்து ஒரு உலகச் செல்வம் ஆகிறது. மற்றும் ஒரு உதாரணம் எடுத்துக் கொள்ளு

வோம். விஞ்ஞான அறிவு (Scientific Knowledge) உலகம் முழுவதும் உபயோகப்படத்தக்கதா யிருக்கிறது. அது ஒரு தேசத்துக்கு மட்டும் செல்வமல்ல. உலக முழுவதற்கும் செல்வமாகும்.

(உ-ம்) ரேடியோ, டெலிவிஷன் முதலானவை.

## மதிப்பும் விலையும் (Value and Price)

செல்வமெனப்பட்டதோடு மதிப்பு என்பது சேர்ந்திருக்கிறது. மதிப்பின்றேல் செல்வமில்லை. மதிப்பு இரண்டு அருத்தங்கள் தரும் முறையில் உபயோகப்படுத்தப் படுகிறது. ஆடம் ஸ்மித் (Adam Smith) என்பவர் உபயோகத்தில் மதிப்பு (Value in Use), மாற்றுதலில் மதிப்பு (Value in exchange) என்று சொன்னார். தற்காலப் பொருளாசிரியர்கள் உபயோகத்தில் மதிப்பு என்பதற்கு உபயோக மென்றும், மாற்றுதலில் மதிப்பு என்பதற்கு மதிப்பு என்றும் கூறியுள்ளார்கள்.

(உ-ம்) உபயோகம் என்பதை எடுத்துக் கொள்வோம். மனிதனுக்கு ஒரு வைரத்தை விடக் காற்று அதிக உபயோகமானது. மனிதன் காற்றில்லாமல் வசிக்க முடியாது. ஆனால் மதிப்பில் காற்றுக்கு விலையில்லை. ஆனால் வைரம் சிலருக்குத்தான் உபயோகமுள்ளதா யிருக்கிறது. மதிப்பும் அதிகமா யிருக்கிறது. ஆதலின் மதிப்பு என்பது இரண்டு சரக்குகளின் சொந்தத்தைப் பற்றி ஒரே காலத்தில் ஒரே இடத்தில் கூறுகிறது. (Value is a ratio.)

ஒரு சரக்கின் மதிப்பை மற்றொரு சரக்கின் மதிப்பால் ஒப்பிடலாம். ஆனால் அது பண்ட மாற்றுதலில் வழங்கப்பெறும். பணத்தினால் ஒரு சாமானின் விலையை அளவிடுவது எளிது.

(உ-ம்) இரண்டு ரூபாய்களுக்கு ஒரு பொம்மை யென்றால் அந்த பொம்மையின் விலை இரண்டு ரூபாய்களென்று தெரியவருகிறது. மதிப்பும் விலையும் பொருளாதார சாஸ்திரத்திற்கு மிகவும் அத்தியாவஸ்யமா யிருக்கின்றன.

செல்வம் பலவகைப்பட்ட சரக்குகளை கொண்டிருக்கிறது. நாம் உபயோகப்படுத்தும் சாமான்கள் ஆங்கிலத்தில் (Consumption Goods) என்று பெயர் பெறும்.

(உ-ம்) நமது உடைகள் ஆகாரம் முதலானவை. மற்றொன்று உண்டாக்கும் சாமான்கள் (Production goods). உண்டாக்கும் சாமான்களை நாம் அப்படியே உபயோகப்படுத்த முடியாது. ஆனால் அவற்றின் வாயிலாக நமக்கு வேண்டியனவற்றைச் செய்து உபயோக மெய்தலாம்.

(உ-ம்) துணி செய்வதற்கு யந்திரம், பயிர் பச்சைகளை உண்டாக்க முதலில் கலப்பை நிலம் முதலானவற்றை உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம். இந்த இரண்டு சரக்குகளுக்கும் அதிக வித்தியாசமில்லை. ஒரே சாமான் உபயோகச் சரக்காகவும் மற்றொரு விதத்தில் உண்டாக்கும் சரக்காகவும் இருக்கும்.

(உ-ம்) ஒரு முதலாளியிடத்தில் சாப்பாடும் துணிமணிகள் அவருடைய வேலைக்காரர் பொருட்டு இருப்பதாக வைத்துக் கொண்டால் அவை வேலைக்காரர்களைப் பொறுத்த மட்டில் உபயோகச் சரக்குகளாகும், முதலாளியின் கருத்தைப் பற்றிய வரையில் அவை உண்டாக்கும் சாமான்களாகும்.

## உண்டாக்கும் சாமான்கள் (Production goods)

இவை நிலம், மனிதனுடைய முயற்சியால் ஆக்கப்பெற்ற இயந்திரம், தொழிற் சாலைக் கட்டிடங்கள், வண்டித் தொடர்கள், கப்பல்கள் மூலதனப் பொருள்கள் முதலானவையாகும்.

## வருமானம் (Income)

வருமான மென்பது பணத்தால் அளக்கப் பெற்ற செல்வமாகும். ஒரு தனிப்பட்ட நபரின் வருமானத்தை ஆங்கிலத்தில் (Individual income) என்கிறோம். ஒரு தேசத்தின் வருமானத்தை (National income) என்று சொல்கிறோம். மற்றும் இதை (National Dividend) என்றும் சொல்லலாம். தேசிய வருமானம் மனிதனுக்கு நேர் முகமாய் சுகம் தரும் சரக்குகளைக் குறிக்கிறது. ஆனால் தேசியச் செல்வம் (National Wealth) உண்டாக்கும் சாமான்களைக் குறிக்கும்.

(உ-ம்) யந்திரங்கள், யந்திரசாலைகள், நிலம் முதலாயின.

## மூலதனமும் வருமானமும் (Capital and Income)

பிஷர் (Fisher) எனும் பொருளாதார நூலாசிரியர் மூலதனத்தைப் பற்றி பின் வருமாறு சொல்கிறார். மூலதன மென்பது ஒரு கொடுத்த சமயத்திலிருக்கும் செல்வமாகும். அதாவது (A Stock of wealth existing at a given instant of time is called capital). வருமானத்தைப்பற்றி அவர் சொல்லுவதாவது:—செல்வத்தினின்று எழும் நன்மைகள்—ஒரு குறிப்பிட்ட காலத்திலுண்டாவது—நன்மைகள் வருமான மெனப்படும். (A flow of benefits from wealth through a period of time is called income). இதனால் மூலதனமும் வருமானமும் நெருங்கிய சம்பந்தம் கொண்ட தென்பது விளங்கும். வருமானத்தைக் கொடுக்கும் செல்வத்தின் ஒரு பாகத்தை மூலதன மென்கிறோம். உண்டாக்குதல் (Production) என்பதில் மூலதனம் மிக்க பயனைக் கொடுப்பதால் வருமான முண்டாகிறது.

## மூலதனம் (Capital.)

இதில் பலவகை உண்டு.

(1) வியாபார மூலதனம் (Trade capital)

(2) சமூக மூலதனம் (Social capital)

(3) தனிப்பட்ட நபரின் மூலதனம் (Individual capital)

வருமானத்தில் தனிப்பட்ட வருமானம் (Individual income) சமூக வருமானம் (Social income) என்று இருக்கிறது.

## வியாபார மூலதனமும் பண வருமானமும் (Trade capital and money income)

ஒரு பண வருமானம் ஒருவன் செலவிடும் செல்வத்தின் ஒரு பங்கிற்கு வியாபார மூலதன மென்று சொல்லப் படுகிறது. வியாபார மூலதனத்தில் உண்டாக்குபவனுடைய சரக்குக ளிருக்கின்றன.

(உ-ம்) அவனுடைய நிலம், தொழிற்சாலை, மூலதனப் பொருள்கள் (Raw materials) முதலாயின. மேலும் உபயோகிப்பவர்களுடைய சரக்குகளும் உள.

(உ-ம்) ஆகாரம், ஆடை முதலாயின. மற்றும் அவனுடைய தொழிலில் நம்பிக்கையும், அவன் சில கம்பெனிகளில் போட்டிருக்கும் "ஷேர்"களும் அடமானத்தின்மீது கொடுத்திருக்கும் கடன்களும் வியாபார மூலதனத்திலடங்கியுள.

## சமூக மூலதனம் (Social capital)

சமூக மூலதனம் தனிப்பட்ட நபரின் மூலதனத்திற்கு Individual capital) மாறாக உளது. சமூக மூலதனத்தில் இயற்கையின் பரிசு (Free gifts of Nature) களைக் குறிக்கும்.

பூமியானது ஒரு தனிப்பட்ட நபருக்கு உரித்தாக இருக்கும்பொழுது அந்த நிலம் அவனுக்கு மூலதனமாகக் கருதப்படுகிறது. ஜனசமூக நோக்கத்திலும், சமூக மூலதனத்தைப்பற்றிக் கணக்கெடுக்கும் பொழுதிலும் நாம் இயற்கையின் பரிசுப் பொருளைப் பெறுவதிலும், மனிதனுடைய முயற்சியினால் உண்டாக்கப்படும் சரக்கினால் ஏற்படும் வித்தியாசத்தை யறிந்து கொள்ளவேண்டும். மனிதன் உண்டாக்கிய பொருளினால் செல்வமுண்டாக்குவதற்கு ஏதுவாக இருக்கும் அப்பொருளை சமூக மூலதனத்தில் சேர்த்துக் கொள்ளலாம். இதனால் நிலமும் ஏனைய இயற்கையின் பரிசுகளும் சமூக மூலதனத்தில் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. ஏனெனில் இயற்கைப் பரிசுகள் ஒரு சமூகத்தின் செல்வத்தில் (Social wealth) அடங்கியுள. நிலம் சமூகத்திற்கு இயற்கையின் பரிசுகளில் ஒன்றாக இருந்தாலும் மனிதனுக்கு இனமாக கொடுக்கப் படவில்லை. ஒரு மனிதன் கொஞ்சப் பூமியைத் தனக்கே உரித்தானது என்று சொல்லிக் கொள்வதற்கு தனது மூலதனத்தில் ஒரு பகுதியை விலையாகக் கொடுக்கவேண்டும். அதனால் மனிதனுக்கு பூமி மூலதனமாகக் கருதப்படுகிறது.

## சமூக வருமானம் (Social income)

ஒரு சமூகத்தின் வருமானத்தைச் சமூக வருமான மென்று சொல்லுவார்கள். இது பணரூபமாக இருக்கவேண்டு மென்பதில்லை. இதில் பலவித நன்மை தரும் வருமானமுள. உதாரணமாக ஒருவன் தனது சொந்தவீட்டில் வசிப்பானேயானால் அதனால் ஏற்படும் நன்மையை அவன் தனது பண வருமானத்தில் ஒரு பகுதியாகச் சேர்த்துக் கணக்கெடுப்பதில்லை. ஆனால் அவன் சொந்த வீட்டில் வசிக்கும் நன்மையானது அவனுடைய மொத்த வருமானத்தில் (Total income) ஒரு பகுதியாகச் சேர்ந்திருக்கிறது. அதை மொத்த சமூக வருமானத்தில் ஒரு பகுதியாக நாமெடுத்துக் கொள்ள வேண்டும். அதனால் அந்த நன்மை சமூக வருமானத்தில் சேர்ந்து விடுகிறது. அதே மாதிரி சமூக மூலதனத்தில் ஒருவன் போட்டுக்கொள்ளும் ஆடைகளிலும், ஒருவன் உபயோகிக்கும் நாற்காலி முதலிய சாமான்களிலும், ஏற்படும் நன்

# தன் மதிப்பு

(சித்தூர்-பண்டித பூ. ஸ்ரீநிவாசன்.)

தன் மதிப்பு என்பதற்குத் தற்காலத்தில் விளங்குமாறு பொருள் கூற வேண்டுமாயின் சுயமரியாதை என்னலாம். தன் மதிப்பு என்பது தமிழ்மொழி; சுயமரியாதை என்பது வடமொழி; தன்மதிப்பு அல்லது சுயமரியாதை என்னும் இச்சொற்றொடர்கள், ஒருவன் பிறருக்காயினும் பிறவற்றிற்காயினும் அடங்கி அடிமைப்பட்டுத் தன் பெருமையை (மேன்மையை) இழந்து விடாமல், தன்மதிப்பை அல்லது தன் மரியாதையையுடையவனா யிருத்தல் என்னும் பொருள்படும். "அடிமை நாட்டில் சுயமரியாதைக் கிடமேது" எனச் சில மாதங்களுக்கு முன் திரு. ராஜேந்திரபாபு தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணஞ் செய்தபோது சுயமரியாதைக் கக்ஷியைக் குறித்துக்கூறியது உய்த்துணரத்தக்கதாம். தன்மதிப்பு நிலையில் தலைதூக்கி நிற்கவேண்டிய மானிடன் அடிமைப் படுகுழியில் வீழ்ந்து அல்லற்பட் டுழன்றுகின்றான். ஒருவருக்கா இருவருக்கா ஒரு பொருளுக்கா இரு பொருளுக்கா பல்லோர்க்கும் பலவற்றிற்கும் அடிமைப்பட்டுக் கிடக்கின்றான். சுயேச்சை வாழ்க்கை யுடையவனுய்த் தன்னினும் உருவத்தினும் வலிமையினும் பராக்கிரமத்தினும் ஏனைப் பலவற்றினும் மிகுந்துள்ள யானை சிங்கம் முதலியவற்றைத் தன்னடிமைப்படுத்தவல்ல மனிதன் அடிமைப் புத்திகொண்டு அடிமைவாழ்க்கை நடாத்துதல் அவமானத்தைத் தரும் விஷயமல்லவா?

---

மையானது அடங்கிவிடுகிறது, ஆனால் ஆல்Fபிரெட் மார்ஷல் அந்தமாதிரி சேர்த்துக்கொள்வதை விரும்புவதில்லை.

அவருடைய கருத்தின்படி சமூக மூலதனத்தில் பூமியும் ஏனைய இயற்கையின் பரிசுகளும் சேருவதில்லை,

மூலதனத்தில் பலவகை உள. (1) உபயோகப்படும் மூலதனம் (Consumption capital) அதாவது ஜனங்களுடைய நேர்முகமானவகையில் திருப்திகொடுக்கும் சரக்குகள், விளக்கமாகச் சொன்னால் உபயோகிப்பவர்கள் உண்டாக்கும் பொழுது நேர்முகமாக அடையும் சரக்குகளைக் குறிக்கும்.

(உ-ம்) உபயோக மூலதனத்தில் ஆகாரமும் ஆடையும் அடங்கியுள. மற்றொரு மூலதனம் 'உதவி மூலதன' மென்று சொல்லப்படும். (Auxiliary Capital). இதில் உபயோக மூலதனத்தைத் தவிர்த்து ஏனைய உண்டாக்குதற்கு தேவையான சரக்குகளைக் கொண்டுள்ளது.

(உ-ம்) யந்திரங்கள், கப்பல்கள், யந்திரசாலைகள் முதலியன.

(தொடரும்)

இத் தமிழகத்தில் சுயமரியாதையை நிலைநாட்டவும் அடிமைப்புத்தியை யொழிக்கவும் வேண்டுமென்னும் நோக்கத்தோடு ஓரியக்கம் சுயமரியாதைக் கக்ஷி யென்னும் பெயரோடு தோன்றியிருந்தது. இக் கக்ஷி சில அரும்பணிக ளாற்றியதெனினும் அஃது சுயமரியாதை என்றால் என்ன வென்பதை யுள்ள படி யறிந்து தொண்டாற்றத் தவறிவிட்டதால் இழிநிலை யெய்தத் தொடங்கி யது. கடவுள் நிந்தனை அந்தணர் நிந்தனை என்னும் இவ்விரண்டுமே தன் மதிப்பாளர் கடமை என்று கருதித் தவறான நெறியிற் சென்றுவிட்டது. மக்கள் கடவுளுக் கடிமைப்படாமையும் அதாவது அவன் ஆண்டான் நான் அடிமை என்றெண்ணி வழிபடாற்றுதலும் அதற்கனுகுணமாகவுள்ள சிரார்த் தாதி வைதிகச் சடங்குகளும் பிராம்மணர்களை வணங்கி அவர்தம் சொற் படி செய்யத் தக்கனவாயிருத்தலின் அவர்தம் உதவியால் நடத்தப்படும் அத் தகைய சடங்குகளாலும், பணம் பறிக்கும் நோக்கத்தோடு பயனற்ற இச்சடங் குகளில் மனிதர்களை எய்த்துச் செலுத்தியவர்களெனக் கருதப்படும் பிராம்ம ணர்களும் அடிமைப் புத்திக்குக் காரணமெனக் கொண்டு இவற்றை யொழித் தலே சுயமரியாதை என்று அவர்கள் கொண்டு அதற்காக வேலை செய்தார் கள். அவ்வியக்கத்தைப்பற்றியோ அதன் தொண்டர்களைப்பற்றியோ நாம் ஏதும் இங்கு பேசவில்லை; பேசவேண்டுமென்னும் விருப்பமுமில்லை; இவ் வியாசத்தின் நோக்கமு மதுவல்ல. தன்மதிப்பு அல்லது சுயமரியாதை என் பதைக் குறித்து எழுதத் தொடங்கினமையின் அப்பெயரா லழைக்கப்படும் இயக்கத்தைப்பற்றியும் இரண்டொரு விஷயம் சொல்ல நேர்ந்தது.

நாம் பலருக்கும் பலவற்றிற்கும் அடிமைப்பட்டுக் கிடக்கின்றோம். கட வுள் வழிபாட்டையும் அந்தணர் கொள்கையையும் புறக்கணித்து விடுதல் மாத்திரத்தால் ஒருவன் அடிமைத் தளையினின்றும் நீங்கியவனாக—தன் மதிப் புடையவனாக—சுய மரியாதைக்காரனாக—ஆய் விடமாட்டான். ஏனெனில் அவன் வேறுபலவற்றிற்கும் அடிமைப் பட்டிருக்கின்றான். சரியான சுயமரியா தைக்காரனாகத் தன்னைச் செய்துகொள்ள வேண்டுமாயின் அந்தத் தளைகளி னின்றும் மீட்சி பெறுதல் வேண்டும். அவ்வாறு நம்மை யடிமைப்படுத்தி யிருப் பன யாவை? எத்துணையோ துர்க்குணங்கள் நம்மைத் தமக்கடிமைப்படுத்தி யிருக்கின்றன. அவற்றிற்கு நாம் அடிமைகளாகத்தா னிருக்கிறோம். கோபத் திற்கும், குரோதத்திற்கும், காமத்திற்கும், பொறாமைக்கும், பொய்க்கும், வஞ் சனைக்கும், ஆசைக்கும் மற்ற பல தீக்குணங்களுக்கும் நாம் அடிமைப்பட்டுக் கிடக்கின்றோ மென்பதை யாரேனும் மறுக்க முடியுமா. அவர்கள் வசப்பட்டு நாம் படும் துன்பங்கள் அம்மம்ம! அளவிட்டுரைத்தல் யாருக் கியலும். ஐம் பொறிகளை வாயில்களாகவுடைய ஐம்புல வேடர்களுக்கு நாமடிமைகளல்லவா? இவைகளுடைய அடிமைத் தன்மையினின்றும் நீங்காதவரையில் நாம் தன் மதிப்புடையவர்களெனச் சொல்லிக் கொள்ளச் சிறிதும் இடமேயில்லை. இவற்றையெல்லாம் வென்று சித்திபெற்ற வீரனே தன் மதிப்புடையவன்—சுயமரியாதைக்காரன்—சுயேச்சை பெற்றவன்—சுயராஜ்யம் பெற்றவன்.

இவ்வடிமையினின்றும் விடுதலை பெறுவதெப்படி? தன் நிலையை யறிந்தால்—தான் யார்? என்பதை யறிந்துகொண்டால் விடுதலை உடனே பெறலாம். இப்போதுதான் கடவுள் என்னும் பெயரால் அழைக்கப்படும் ஓர் பரம்பொருளின் உதவி நமக்கு இன்றியமையாத தாகின்றது. நான் அப்

பரம்பொருளின் பிள்ளை என்பதை யறிந்தால்—ஐயமறவறிந்தால்—அடிமைத் தளையினின்று விடுதலை பெறுவோம். தன் நிலையை யறியாமல் வேடர் கூட்டத்தில் வளர்ந்த அரச குமாரனொருவன் அக் குலத்தொழில் புரிந்து கஷ்டமடைந்தவன், தான் 'வேடனல்ல; அரசகுமாரன்" என்று அறிந்து கொள்வானானால் அதன்பிறகு அக் கூட்டத்தோ டிணங்கி கஷ்டப்படமாட்டான். அப்படியே நாமும். இச்சரீரம் நானல்ல, இந்திரியம் நானல்ல; புத்தியாதி அந்தக்கரணம் நானல்ல; நான் ஆனந்த வடிவினனாகிய ஆண்டவனுடைய குமாரன்; என்னை நான் உள்ளவாறு தெரிந்து கொள்ளாமையால் இத் துர்க்குண வேடர்பாற் சிக்கி அவர்களுக்கடிமையா யிருந்தேன் என்று உள்ள வாறு உணர்ந்துகொண்டு அவைகள் (காமக் குரோதாதி துர்க்குணங்கள்) ஆட்டும் விதமெல்லாம் ஆடும் அடிமைகளாக இருக்கமாட்டோம். அப்போது தான் நாம் தன்மதிப்பு—சுய மரியாதை—உடையவர்களாவோம் என்பதை ஒவ்வொருவரும் உணர்தல் வேண்டும்.

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளுந் துன்பமில்லை.

என்?

தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க்
கொய்ம்மலர் சேவடியிணையே குறுகினோமே.

இங்கே மீளா வாளாய் என்பதற்கு மீளா அடிமை எனப் பொருள் கொள்ளாது நீக்கமுடியாத மகன் எனக்கொள்க.



# "மணிமேகலை" ஆராய்ச்சி

R. V. இராமஸ்வாமி B. A., B. L. வக்கீல், சேலம்.



## 3. சரித்திரப் பகுதி.

(442-வது பக்கத் தொடர்ச்சி.)

### (கோவலன் கதை நிகழ்ச்சி)

கண்ணகி கணவனோடும் மேலுலகஞ் சென்றதைக் கண்ணிற்கண்ட குறவர்கள், மலைநாட்டு முறைப்படி, மலைவளங் காண மனைவியோடு மலையமர்ந்தாடும் பேரியாற்றங்கரைக்கு வந்திருந்த செங்குட்டுவனிடம், மலைபடு பொருள்கள் பலவும் வாரிவந்து கொடுத்திட்டுக் காரிகையின் அற்புதச் செயலையும் கூறினரென்பதும், அவ்வமயத்து ஆங்கிருந்த புலவர் சாத்தனார், மதுரையில் தாம் நேரில் கண்ட கண்ணகியின் விருத்தாந்தங்களை ஒன்றன் பின் ஒன்றாகக் கூறினரென்பதும் சிலப்பதிகாரத்தால் விளங்கும். இச் செங்குட்டுவன் ஐம்பத்தைந்தாண்டுகள் இருந்தனனென்பது பதிற்றுப்பத்தால் அறியலாம்.

### (தலை நகரங்கள்)

தமிழ்நாட்டின் தலைநகரங்களாக விளங்கியிருந்த மூன்று நகரங்களையும் குறித்துச் சாத்தனார் கூறியுள்ளவைகளால், அந்நகரங்களின் தொன்மையும் அதில் வசித்து வந்தோரின் குணப்பான்மையும், அவற்றை ஆண்டுவந்தவர்களின் மேன்மையும் ஒருவாறாக அறிதற் கியலுகின்றன. கல்வியாலும் போர்த்திறத்தாலும் செல்வச் செழிப்பாலும், சீரும் சிறப்புமுற்று விளங்கி இப்பதிகளிருந்தமைபற்றி யன்றோ, ஔவையாரும்,

> "வேழ முடைத்து மலைநாடு மேதக்க
> சோழவளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
> தென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயல்தொண்டை
> நன்னாடு சான்றோர் உடைத்து."

எனப் பாராட்டிக் கூறியுள்ளனர். சாத்தனார் தமது நூலில் தமிழ்நாடுகளாகிய இவற்றின் பெருமை அழியாது என்றும் நிலைத்து நிற்கவெனக் கருதி அவற்றைக் குறித்துக் கூறியுள்ளனவற்றில் சிலவற்றை உயர்த்திக் கூறியுமிருக்கலாம். ஆயின் சரித்திர நூலாராய்ச்சியினரெவரும் பல ஆதாரங்களை மூலாதாரமாகக்கொண்டு, இந்நகரங்கள் நலம் பலகொண்டு மேன்மையாகச் சிறந்து விளங்கி யிருந்தனவாகவே கூறியுள்ளமையின், இங்கு இவ்வாசிரியர் மொழிந்துள்ளவைகளும் பெரும்பாலும் உண்மையாகவே இருத்தல் வேண்டுமென்பதைத் துணிவுடன் கூற இடமுள்ளது.

## 12. பிற சரித்திரச் செய்திகள். தீவுகள்.

சரித்திர நூற்களறிந்த தீவுகளும், மலைகளும் வேறு பலவும் மணிமேகலையில் காணப்படுகின்றன. மணிபல்லவம், காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தென்திசையில் ஆறைந்து யோசனை தூரத்திற் கப்பாலுள்ளது. அது 'இருங்கடல் வாங்குதிரை' யா லுடுத்தப்பட்டதொரு தீவு. (மணி. 6: 211-4; 8: 1-2; 9: 55-7) புண்ணியராசனது கழிந்த பிறப்பு வரலாற்றை அவனுக்கு உணர்த்தியவளும், காவிரிப்பூம்பட்டினம் கடலாலழிந்ததை மணிமேகலைக்குக் கூறியவளுமாகிய தீவதிலகை யென்பவளால் அது இந்திரனின் கட்டளைப்படி காக்கப்பட்டு வந்தது. பழம் பிறப்பை யுணர்த்தும் புத்தபீடிகை யொன்றும், கோமுகி யென்ற பொய்கையொன்றும், அங்கிருந்தன. (காதை. 25.) மணிபல்லவம் இலங்கைத் தீவிற்கு வடக்கேயுள்ள, 'ஜப்னு' வெனப்படும் யாழ்ப்பாணம் முதலிய சிறுதீவுகளா யிருக்கலாமென்பது பெறப்படும்.

மற்றும்,

"நால்வகை மரபின் மா பெருந்தீவு
மோரீராயிரஞ் சிற்றிடைத் தீவு."

என (6: 195-6; 25: 223-5) இவ்வுலகின் நடுவேயுள்ள மேருமலையினையும் அதைச் சூழ்ந்துள்ள ஏழுமலைகளும், நான்கு வகைப்பட்ட பெருந்தீவுகளைப் பற்றியும் ஈராயிரம் சிறிய தீவுகளைப்பற்றியும் இங்கு கூறப்பட்டுள்ளது. இத்தீவுகள் யாவும் எவற்றைக் குறிப்பனவென்பது துணிய முடியவில்லை.

சாவக நாடென்பது ஒருதீவு. அது பெரிய அரசிறைக் குட்பட்டிருந்தது. நாகபுரமென்பது அதன் தலைநகரம். அமரசுந்தரியின் கணவனாகிய பூமிசந்திரனென்பவன் அதனை அக்காலத்திலாண்ட மன்னன். அவன் புத்தமதத்தைச் சார்ந்தவன். இந்நாடு மழையின்றிப் பஞ்சப்பிணி பாதிக்க வருந்திப் பல உயிர்களையும் பசியெனுங் காலனுக்கு இரையாக்கியது. (மணி. 14: 73-84) சுவையிற் சிறந்து விளங்கிய ஆபுத்திரனாகிய புண்ணியராசன் பின்னர் அந்நாட்டிற்கு மன்னனா யிருந்தனன். (21: 89) அவன் பிறந்த தினத்திலிருந்து அந்நாடு பலவளமும் பெறுவதாயிற்று. இந்நாட்டில் தவளமலை யென்ற மலை யொன்றுண்டு. இத் தீவை தற்காலத்தில் விளங்காநிற்கும் "ஜாவா" என்பர்.

### (நாக நாடுகள்)

நாகநாடென்ற பெயர்கொண்டு மணிமேகலையில் இரண்டு நாடுகள் வந்துள்ளன. ஒன்று புத்த பீடிகையை யெடுத்துச்செல்ல முயன்ற பகைமை கொண்ட மன்னர்களது. மற்றொன்று, கடலருகிலிருந்த "நக்க சாரணர் நாகர்"கள் வாழும் மலையைப்பற்றியும், அதை யாண்டுவந்த குருமகனைப்பற்றியும், மனிதரைத் தின்றல், கள்ளுண்ணலாகிய அந்நாட்டினரின் இழிய பழக்கவழக்கங்களைப்பற்றியும், பெண்டிரு முண்டியுமே பிறவியிலுரு மின்பமெனக் கொண்டிருந்த அவர்களின் கொள்கையைத் திருத்திக் கற்பாசி ஆதிரையின் கணவன் சாதுவன், அம்மக்களை நல்வழிப்படுத்தியதையும்; ஆசிரியர் கூறியுள்ள நாடாகும். இவைகள் எவரைக் குறிப்பனவென்பது விளங்கவில்லை. ஆராய்ச்சி வேண்டும்.

இவற்றோடன்றிக் கிள்ளிவளவன் மணந்த பீலிவளையின் தந்தையும், வாசமயிலையின் கணவனுமான, வாகைவேலோன் வளைவாணனென்னும் அர

சன் ஆண்டுவந்த நாகநா டொன்றும் குறிக்கப்பட்டுள்ளது. (25: 54-5) தொண்டைமா னிளந்திரையனது கதையைக் கூறுமிடத்து நச்சினார்க்கினியர் நாகரைப் பாதளத்திலுள்ளவராக்கிக் கூறுகின்றனர். அப் பாதளவாசிகள் படமும் வாலுமுடையரான தேவசாதியரி லொருவராகக் கூறப்படுவர். நாக ரென்ற சாதி வகுப்புப்பட்ட இம்மக்கள் தமிழ்நாட்டின் சில பாகங்களிலும் சாவகத்தீவு முதலிய இடங்களிலும் வசித்து வந்தவராகச் சிலர் கூறுவர். பீலிவளை யென்பவள் ஜாவா எனப்படும் தீவிலுள்ள நாகமக்களின் அரச னாகிய வளைவாண னென்பானின் மகளென்பது ஒரு சிலரின் கூற்று. இந் நூலாசிரியரும், வளைவாணனைக் கீழுலகத்து மன்னனெனக் கூறாது, நாக ரென்ற பகுப்பினரின் அரசனெனவே கூறி யிருப்பரென்று எண்ண இட முள்ளது. அத்திபதிக்கு முனிவர் பிரமதருமர், தருமோபதேசம் செய் கையில், "பூகம்பத்தினால் நாகநன்னாட்டில் நானூறு யோசனை யளவும் பாத ளத்தே வீழ்ந்து கெட்டழியு" மென்று அறிவிப்பாராயினர். (காதை. 9) அந் நாகநாடு பாதளலோகத்துள்ள நாகரின் நாடாயின் அது மீண்டும் பூகம்பத் தால் பாதளம் செல்லுமென முனிவர் கூறினரெனக் கொள்ளுவது வருந்திக் கொள்ளினன்றி, மேலாக நோக்குமிடத்துப் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆசிரியர் பலவகை சாதி மக்களில் ஒருவராகிய நாகரென்போர் வசித்து வந்த நிலப்பரப்பைக் குறித்தாரென்று கொள்ளுவதே சிறப்பாகத் தோன்றுகின்றது. அங்ஙனமே, சோழனுடன் பூங்காவில் வசித்த பீலிவளையையும் பாதளவாசி யாகக் கருதுவது அத்துணை சிறந்ததாகத் தோற்றவில்லை. நச்சினார்க்கினியர் குறித்திடுமாறு பாதளத்துள்ள நாகரென நினைத்திடுவது ஒத்த பொருளாகுமா வென்பது கற்றோர் ஆராய்ந்தறிந்து தெளிவுபடுத்த வேண்டியதொரு விஷ யம். நாகரென்பவர் நாகலோக மெனப்படும் பாதளத்தில் வசிப்பவராக இருக்கலாம். அன்றி நாகங்களைக் கற்களில் பொறித்து அதனைத் தெய்வமா கத் தொழுது கொண்டாடும் ஒருவகைச் சாதியினராக இருக்கலாம். அவ்வா றன்றி நாகஇலச்சினையை யுடைமைபற்றி இப் பெயரைப் பெற்றவராகவுமிருக் கலாம். "நாகநாடு நடுக்கின்றாள்பவன்" (24=54); "நாக நன்னாடாள்வோன்" (25: 178); "நாக நாடாள்வோன்" (26: 3) என பலவகையாக நாகநாட்டு மன்னனைக் கூறுதல் நோக்குக.

## (பிறநாடு முதலியன)

புத்ததேவனின் பிறந்த இடமாகலின் சாத்தனார் மகதத்தையும் கபிலை யையும் நூலெங்கணும் உயர்த்திக் கூறியுள்ளனர். சிங்கபுரத்தரசனாகிய வசு வென்பானோடு போர் செய்த குமரனென்னும் அரசனுடைய தலைநகராகிய கபிலபுரமென்று மற்றொரு கபிலையும் இங்கு கூறப்பட்டுள்ளது. இது கலிங்க நாட்டிலுள்ளது. புத்தர் அவதரித்த கபிலையைக் கபிலவாஸ்துவென்றும் கூறு வர். மேற்கூறிய கலிங்கநாடு, வசு, குமரனென்ற இருவர்க்கு முரியது. சமந்தமென்ற பெயருடைய மலையொன்றுண்டென்பதும், அது மணிபல்லவ தீவத்திற்குச் சமீபத்திலுள்ள தென்பதும், ஆங்கு புத்ததேவனது பாத பீடிகை யொன்றுண் டென்பதும்,

"ஈங்கித னயலகத் திரத்தின தீவத்
தோங்குயர் சமந்தத் துச்சி மீமிசை
யறவியங் கிழவோ னடியிணை யாகிய."

(11: 21-3) என்ற அடிகள் குறித்திடும்.

பின்னர்,

"இலங்கா தீவத்துச் சமனொளி யென்னுஞ்
சிலம்பினை யெய்தி.........." (28: 107-8)

என இலங்கைத்தீவில் சமனொளி யென்ற மலையுள்ளதையும் கூறப்பட்டுள்ளது. இவற்றிலே கூறிய சமந்தமென்பதும் சமனொளி யென்பதும் ஒரு மலையாகவே இருத்தல் வேண்டுமெனத் தெளியலாம். முன்னடிகளில் இரத்தினத் தீவமென்றதும், பின்னடிகளில் இலங்கா தீவமென்பதும் ஒன்றாகவே இருத்தல் வேண்டும். மணிபல்லவம் காவிரிப்பூம் பட்டினத்திறகுத் தென் பக்கத்திலுள்ளதென்று கூறப்பட்டிருப்பதாலும் (6: 211-3) இரத்தினதீவம் மணிபல்லவத்திற்கு அயலிடத்துள்ளதென்றும், அங்கு புத்தனின் பாதக்குறியுள்ள சமந்தமென்னும் மலையொன்றுள்ளதாகத் தெரிவதாலும், மற்றும் இலங்கையில் பௌத்தர்களால் விசேடித்துக் கூறப்படும் சமனொளியென்ற பெயருள்ள மலையொன்றுண்டென்று தெரிவதாலும் (28: 107-8) சமந்தமென்பதும் சமனொளியென்பதும் இலங்கையிலுள்ள "ஆடம்ஸ் பீக்" என்று தற்காலத்தில் வழங்கப்படும் மலையினையே குறிப்பதென்பர். இம்மலை காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சற்றேறக்குறைய மூப்பதுகாத தூரத்தில் தற்காலத்திலிருப்பதும்; இக் காலத்திலு மது சமந்த கூடமென்றும் சமனொலை யென்றும் கூறப்பட்டு வருதலும்; இரத்தினத்தீவமென்பது இலங்கைத் தீவையும் சமனொளியென்பது "ஆடம்ஸ் பீக்" என்ற மலையினையும் குறிப்பன வென்பதற்குப் போதிய சான்றுகளாகும்.

இந்நூலில் மற்றும், அமுதபதியின் கணவனும், அங்கநாட்டிலுள்ள கச்சயநகரின் அரசனும், அறவணவடிகளால் பாதபங்கயமலையைத் தரிசித்தவனுமாகிய துச்சயனது மனைவியரா யிருந்து பின்னர் மாதவியும் சுதமதியுமாகப் பிறந்த தாரை வீரையுமாகிய இரு சகோதரிகளோடு பாயபு கடித்துக் கணவன் இராகுல னிறந்தபின்னர் தீக்குளித்து உயிர்நீத்துப் பின், நல்வினைப்பயனால் மணிமேகலையாகப் பிறந்து மேம்பாடுற்ற இலக்குமியுமாகிய சகோதரிகள் மூவரின் தந்தையான இரவிவன்மனென்னும் அரசனது நகரமாகிய அசோதரமும்; சீதரனென்னும் சித்திபுரத்து அரசனது மகள் நீலபதியின் கணவனும், கண்களில் விடமுடைய திட்டிவிடமென்னும் பாம்பு தீண்ட இறந்து பின்னர் புகாரின் அரசனாகிய கிள்ளிவளவனது புதல்வன் உதயகுமாரனாகப் பிறந்த இராகுலனின் தந்தையும், காந்தாரமென்ற பெரியதொரு நாட்டிலுள்ள பூருவ தேசத்தின் அத்திபதியின் நகரமும், பூகம்பத்தால் அழிந்து சென்றதுமான இடவயமும் (9: 27-8); அப்பூகம்பத்திற்குப் பயந்து அத்திபதிநகரினரோடும் சென்ற வடபாலுள்ள அவந்தி நகரமும், அசோதரத்து மன்னன் இரவிவன்மனது மருமகனாகிய துச்சயாராஜனுடைய இராசதானி நகரமாகிய கச்சயமும்; வித்தியாதரர்களின் பல நகரங்களி லொன்றான காஞ்சனபுரமும் (17: 21); கோசாம்பியும்; மாதவியின் தோழியான சுதமதியின் தந்தை கௌசிகன் வசித்து வந்ததும் கடலருகிலுள்ள நகரங்களிலொன்றானதுமான சண்பையும்; கபிலபுரத்தரசனான குமாரனோடு போர் செய்த வசுவென்னும் மன்னன் ஆண்டு வந்த கலிங்கநாட்டிலுள்ள சிறந்ததொரு தலைநகரமாகிய சிங்கபுரமும் (26: 15-7); பாண்டிய நாட்டிலுள்ள வயனங்கோடும்; நியமந்தப்பிய சாலியின் கணவன் வேதமோதுவிக்கும் அபஞ்சிகனென்பான் வசித்துவந்த காசி

# கருட வாகனனையே மணப்பேன்



(K. S. சடகோப ராமாநுஜ நாயுடு.)

கொஞ்ச காலத்திற்கு முன்பு, மிகுந்த விஷ்ணு பக்தியுள்ள அரசன் ஒருவன் இருந்தான். அவனுடைய மகள், தன் தகப்பன் பகவத் காலக்ஷேபம் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது தானும் கூட இருந்து கவனித்துக் கொண்டிருந்ததாலும், அரசன் விஷ்ணு பக்தர்களை அதிகம் ஆதரித்ததால், பக்தர்கள் அரசனிடம் கருடவாகனனாகிய நாராயண னுடைய பெருமையையும் அவன் கல்யாண குணங்களையும் வர்ணித்துக் கொண்டிருக்கும் பொழுது, இச்சிறுமி கவனமாய்க் கேட்டுக் கொண்டிருந்த தாலும், நாளடைவில் இவளுக்கும் விஷ்ணு பக்தி முதிர்ந்துவிட்டது. மேலும், "பக்தி யுள்ளவர்களுக்கும், தன்னைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப் படுகிறவர்களுக்கும், பகவான் ஸுலபன். உதாரணமாக 'அவனைத் தவிர வேறொருவரையும் மணம் செய்துகொள்ள மாட்டேன்' என்று ஆண்டாள் என்னும் பக்திமதி ஒருத்தி வைராக்யமாக இருந்து முடிவில் அவனையே மணந்தாள்" என்று அவர்கள் சொல்லியதைக் கேட்டதிலிருந்து, இந்த ராஜ குமாரியும், கருடவாகனனாகிய நாராயணனை யன்றி வேறொருவரையும் மணம் செய்து கொள்வதில்லை என்று விரதம் பூண்டாள்.

சில நாட்களில் ராஜகுமாரியும் விவாகபருவத்தை யடைந்தாள். அநேக தேசத்து இராஜாக்கள் வந்து பெண் கேட்டார்கள். யார் வந்தாலும் "அவனுக்கு கருடவாகனம் இருக்கிறதா?" என்று கேட்டே எல்லோரையும் திரும்பிப்போய் விடும்படி செய்து வந்தாள். இப்படி யிருக்க ஒரு நாள் அந்த ராஜ வீதிவழியே போய்க் கொண்டிருந்த காமுகன் ஒருவன், உப்பரிகையின்மேல் நின்று கொண்டிருந்த ராஜகுமாரியைப் பார்த்து மயங்கி, "இனி இவளைத்தவிர வேறொருவரையும் மணம் செய்து கொள்வதில்லை" என்று விரதம் பூண்டான். ஆனால் தனக்குக் கருடவாகன மில்லாமையால், அவளை எப்படி யடையப் போகிறோமென்று நாளுக்கு நாள் ஏங்கினான். இவன் சரீரம், நாளுக்கு நாள் மெலிந்து வருவதின் காரணத்தை யறிந்த இவன் தகப்பன் ஆசாரி வகுப்பினனாதலால் மரத்தால் அழகான கருட வாகனம் ஒன்று செய்து, அதற்குள் ஆகாயவிமான யந்திரத்தை வைத்து, அதன் மேலேறி ஆகாயத்தில் பறக்கும்படி தன் மகனுக்குக் கற்றுக் கொடுத்

---

யெனப்படும் வாரணாசியும் (13: 3) இவைபோன்ற பல நாடுகளும் நகரங்களும் குறிக்கப்பட்டுள்ளன. மற்றும், காயங்கரை, குமரியாறு முதலிய நதிகளும்; விந்தம், பொதியில், முதலிய மலைகளும்; அங்கங்கே கூறப்பட்டுள்ளன. மேற்கூறிய நாடுநகரங்களும், ஆறுகளும், மலைகளும் தற்காலத்தில் எங்குள்ளன வென்பதை ஆராய்ந்தறிந்து கொள்க.

தான். உடனே காமுகனானவன், இந்த கருட வாகனத்தின்மேல் ஆரோகணித்துச் சென்று, ராஜகுமாரி இருக்கும் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். கருடவாகனன் அரசன் மூலமாகத் தன் எண்ணத்தை ராஜகுமாரிக்குத் தெரிவிக்கவே, அவளும் கடைசியாக கருட வாகனனாகிய நாராயணனே வந்து விட்டதாகச் சந்தோஷித்து, விவாகம் செய்துகொள்ளச் சம்மதித்தாள். மறுநாள், ராஜகுமாரிக்கும் கருட வாகனனுக்கும் சகல சம்பிரமத்துடன் விவாகம் நடந்தேறியது. அதன் பிறகு, கருடவாகனன் தினந்தோறும் இரவில் ராஜகுமாரி இருக்கும் அந்தப்புரத்தில் தங்கி யிருப்பதும், பகலில் தன் சயனமாகிய திருப்பாற் கடலுக்குப் போக வேண்டுமென்று சொல்லிவிட்டு, தன் கிராமத்திற்கு வந்து விடுவதுமாக இருந்தான்.

இங்ஙனம் சில நாட்கள் செல்ல, அயல்தேசத்து அரசன் மேற்கண்ட ராஜ குமாரியின் தகப்பனோடு யுத்தத்திற்கு வருவதாகச் சொல்லி யனுப்பினான். கருட வாகனனே மருமகனாக இருப்பதால், அரசனும் பயமின்றித் தானும் யுத்தத்திற்குத் தயாராக இருப்பதாகச் சொன்னான். இந்த சமாசாரத்தைத் தன் மருமகனிடம் சொல்லும்படி தன் குமாரத்திக்கு அரசன் சொன்னான். அன்றிரவு, கருட வாகனன் வந்தவுடன் தகப்பன் கூறிய விஷயத்தை அவனிடம் சொல்லவும், கருட வாகனன் "அதற்கென்ன ஒரு க்ஷணத்தில் எதிரிகளைத் தொலைத்து விடுகிறேன்" என்று அலக்ஷியமாய்ச் சொல்லி விட்டான். அடுத்த நாள், யுத்தம் ஆரம்பமாகி விட்டது; எதிரிகள் பாணப் பிரயோகம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். கருடவாகனராகிய ஆசாரியார் இன்னது செய்வதென்று தெரியாது, கையைப் பிசைந்துகொண்டு விழிக்கிறார்.

இந்த நிலைமையில் உண்மையான கருட வாகனனாகிய பகவான் யோசித்துப் பார்த்தார். "ஓஹோ, இதேது! நம்பேர் கெட்டுப்போய் விடும்போல் இருக்கிறதே! ஆசாரியாராகிய கருடவாகனன் தோற்றாலும் நாம் தோற்றோமென்று தானே ஜனங்கள் சொல்லுவார்கள்" என்று நினைத்து, பகவான் கருடன்மீது ஆரோகணித்து வர அதன் இறகின் காற்று பட்டமாத்திரத்தில் எதிரிகள் மடிந்து போனார்கள். இதைக்கண்ட ஆசாரியாராகிய கருட வாகனன், "நான் சொன்படியே, ஒரே க்ஷணத்தில் எதிரிகளைத் தும்சம் செய்துவிட்டேன் பார்த்தீர்களா?" என்று தோள் தட்டினான்.

இதனால் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய தென்னவென்றால், உண்மையாக ஒருவன் பக்தனாக இல்லாவிட்டாலும், உலகத்தார் அவனைப் பக்தனென்று சொல்லி விட்டால், அதற்காக பகவான் அவனுக்கு மோக்ஷம் கொடுத்து விடுவார். பரிபக்குவமான பக்தி ஒருவனுக்கு வராவிட்டாலும், பக்தனென்று லோகப்ரஸித்தம் வந்தாலே போதுமானது.



# கிளி விடு தூது

——(0)——

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

மேற்றிசையிலே, செஞ்சுடர்க் கதிரோன் தனது பொன்னிறக் கிரணங்களை எங்கும் பரப்பிக் கொண்டிருந்தான். செக்கச் செவேலென்று சிவந்த அந்தி வானத்தின் அடியிலே, செந்தீப் பந்தைப் போல் ஜொலிக்கும் அக் கதிரவன், ஒப்புயர்வற்ற அற்புதப் பேரழகுடன் விளங்கினான். பலவித உருவங்கொண்ட முகில்கள், பரந்த வான வீதியிலே பலவகைப்பட்ட இந்திர ஜாலங்கள் செய்து திரிந்து கொண்டிருந்தன. கண்களுக்கும் கருத்துக்கும் ஒருங்கே பெருங்களிப்பூட்டும் அழகிய பூஞ்சோலை ஒன்றிலே—வெள்ளை வெளேலென்று விளங்கிய சலவைக்கல் மேடை யொன்றின் மேலே, சுமார் பதினெட்டு வயது மதிப்புடைய அழகிற் சிறந்த இளமங்கை ஒருத்தி அமர்ந்து கொண்டிருந்தாள். அந்தி வானத்தில் தோன்றிய பலவகைப்பட்ட இந்திரஜாலக் காட்சிகளிலேனும்—மெல்ல மெல்ல இதழ் விரித்து மலர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருந்த மனோகரமான மலர்களிலேனும் அவளது சிந்தை செல்லவில்லை. எதிரிலிருந்த புன்னை மரத்தின் கிளை ஒன்றிலே, ஜோடியாகக் கூடி அமர்ந்து கொஞ்சிக் குலவிக் கொண்டிருந்த அன்றிற் பறவைகளின் மேல் அம் மங்கையின் நாட்டம் சென்றது. அவற்றின் உல்லாஸ லல்லாபத்தைக் கண்ட அம் மங்கையின் உள்ளம், தன்னைத் தனியே யிருந்து தவிக்க விட்டுச் சென்ற தனது காதலனை எண்ணி எண்ணி அனலில் பட்ட வெண்ணெயைப் போல் உருகிக் கொண்டிருந்தது; அவளது கருவிழிகளினின்றும் கண்ணீர் தாரை தாரையாகப் பெருகி வந்து கொண்டிருந்தது. அவ்வன்றிற் பறவைகள் அமர்ந்து கொண்டிருந்த கிளைக்கு மேலுள்ளதொரு கிளையில் தனியே அமர்ந்து கொண்டிருந்த பச்சை மேனிப் பவளவாய் மோகனப் பசுங்கிளி ஒன்று, கிளையை விட்டெழுந்து பறந்து வந்து தன் மடியின் மேல் அமர்ந்த பசுங் கிளியை ஆராத பேரன்புடன் முத்தமிட்டு மகிழ்ந்த அந்த சுந்தரி, அதைத் தனது செங்கையில் ஏந்தி, அதை நோக்கிப் பின் வருமாறு கூறலானாள்:—

"என் கண்ணே! என் செல்வமே! மரகதம் போன்ற பச்சை மேனியும் பவளத்தை யொத்த சிவந்த மூக்கும் கொண்டு, கண்டாரைக் காதற் கடலில் ஆழ்த்திவிடும் மன மோகினியே! மாரவேளைத் தாங்கி மாநிலத்தில் பவனி வரும் சிங்காரியே! என்ன உன் அன்பு! என்ன உன் கருணை!! இன்னுயிர்க் காதலனைப் பிரிந்து தன்னந் தனியே யிருந்து பன்னருந் துயருழந்து பரிதவிக்கும் எளியேனிடம் பரிவு மிகுந்து வந்த பச்சிளங் கிளியே! புன்னை

மலர்களைக் கொத்தித் தின்று கொண்டிருந்த நீ, முன்னை வினைப் பயனால் நெஞ்சு குமுறிக் கொண்டிருக்கும்—என்னைக் கவனித்தது எவ்வாறு? நீயும் என்னைப் போல் உனது காதலனைப் பிரிந்து சிந்தை நைந்து கொண்டிருக்கிறாயா என்ன? என் வாயினின்றும் எம் மொழியும் வெளிப்படா திருந்ததும் எனது அகத்துயரை எனது முகக் குறிப்பினாலேயே உணர்ந்து கொண்டு என்னைத் தேற்ற எண்ணிவந்தாயா என்ன?—இச் சோலையிலே, பலவகைப் பறவைகளும் எத்தகைய கவலையுமின்றி உற்சாகமாகக் கூடியும் பாடியும் கொஞ்சிக் குலவியும் பறந்து திரிந்து கொண்டிருக்க, நீ மட்டும் என்னை நாடி வருவானேன்? நீயும் என்னைப்போல் உனது காதலனைப் பிரிந்து கொடிய துன்பத்தை அனுபவிக்கிறாயா என்ன? அதனாலேயே, நான் அழையாமலிருந்தும், என்னைத் தேற்ற எண்ணி நீயாகவே என்னிடம் வந்து சேர்ந்தாய் போலும்! காதலனின் பிரிவால் நேரும் கொடிய துன்பத்தை நீ நன்கு உணர்வாய் போலும்! என் குறையை உணர்ந்து—எனது இன்னுயிர்க் காதலராகிய முருகப் பெருமானிடம் தூது சென்று எனது முறையீட்டைச் சொல்ல வல்லவர், உன்னையன்றி வேறு எவர்?

என் செல்வமே! முதன் முதலில், முருகப் பெருமான் தனது கைம்மாறற்ற தனிப்பெருங் கருணைப் பெருக்கினால் எனக்குக் காட்சியளித்தருளத் திருவுள்ளம் கொண்டருளிய போது, முதன் முதலில் எனது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது எது தெரியுமா? அப் பெருமானது செங்கையில் விளங்கிய தங்கவேல்—பளபள வென்று ஒளி வீசும் மணி வேல்—நல்லோரை அல்லற்படுத்திய வல்லரக்கரை வதைத்த வீர வேல்—போர் முனையில் பகைவர்களை நடுங்கச் செய்து மெய்யன்பர்களை மகிழ்வித்து வாகை மாலை சூடிய வெற்றி வேல்—ஐம்புல வேடர்களின் செருக்கையடக்கி நல்வழியில் திருத்தி நடத்தக் கூடிய சத்தி வேல்—உயிரை மயக்கி அடிமைப்படுத்திக் கொண்டுவிட முயலும் ஆணவ முனைப்பை அழித்து, உயிர்க்கு உறுதி பயக்கக்கூடிய உண்மைப் பொருளை உணர்த்தி, மெய்யறிவு ஒளி வீசச் செய்விக்கக் கூடிய சீரிய ஞான வேல்—அடியாரைக் காத்தருளும் வடிவேல்—கருணையின் வடிவான அன்னை பராசக்தி அகம் மிக மகிழ்ந்து அளித்தருளிய திருவேலே, முதன் முதலில் எனது உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து, எனது ஆணவ முனைப்புகள் அனைத்தையும் அழித்து, என்னைத் தனக்கே அடிமைப் படுத்திக் கொண்டு சென்று விட்டது. அச் சீரிய வீர வேல், இரு கண்களையும் மூடிக்கொண்டு விட்டால், இப்பொழுதும் எனது மனக்கண் முன்பு காட்சியளித்து நிற்கிறது. ஆனால், அகக் கண்ணால் கண்டு களித்த வேலை புறக் கண்களாலும் கண்டு களிக்கப் பேரார்வங் கொண்டு மூடிக் கொண்டிருந்த கண்களைத் திறந்து விட்டாலோ, அத் தூய வேல் மாயமாக மறைந்து போய் விடுகிறது. அச் சீரிய வேலை எனது கண்கள் இரண்டும் கண்டு குளிர்ந்து களிக்கும்படி, எனது ஆருயிர்த் தலைவராகிய வடிவேல் முருகனை இங்கு வந்து—என் உடலும் உயிரும் ஒருங்கே பரவச மடைய என்னுடன் கலந்து—கருத்தொருமித்த காதலின்பத்தில் மகிழ்ந்து—என்னுடன் கொஞ்சிக் குலவத் திருவுள்ளம் இரங்குமாறு, நீ சொல்ல வல்லாயோ?

பலவகை வளங்களும் நிறைந்து நிலவுலகக் கயிலையாக விளங்கும் தில்லையம்பதியிலே—தேவர்களும் முனிவர்களும் போற்றித் துதிக்கும் தெய்வ மணம் கமழும் திருச்சிற்றம்பலத்திலே, விரிந்து வளைந்த செஞ்சடை ஆட—

குளிர்ந்து சிறந்த கங்கை ஆட—வளைந்து மெலிந்த இளம்பிறை ஆட—திருக் கரங்களில் திகழும் மானும் மழுவும் ஆட—ஒரு பதத்தை நிலத்தில் ஊன்றி நின்று மற்றொரு பதத்தைத் தூக்கி ஆடிக் கொண்டிருக்கும் அம்பலவாணரை அன்பர்கள் பலரும் வாயார வாழ்த்தி மனமாரப் போற்றி மகிழ்ந்து நிற்கின்றார்க ளல்லவா?

அந்த நடன சிகாமணியின் ஆனந்தத் தாண்டவத்திலே மனத்தைச் செலுத்திய வண்ணம், அவரது செல்வத் திருமகனாகிய முருகப் பெருமான் அவரருகில் நின்று கொண்டிருப்பார். அம் முருகப் பெருமானும் அவரது தந்தையாகிய சபாநாயகரும் அருளே உருவானவர்களாதலின், நீ எத்தகைய அச்சமுமின்றி அங்கு தாராளமாகச் செல்லலாம். உன்னைத் தூதியாக அனுப் பிவைத்தவள் நானென்பதை நீ அவருக்குக் கூறியவுடனே, அவர் அம்பலவா ணரது ஆனந்தத் தாண்டவத்தில் ஈடுபட்டிருந்த தனது நெஞ்சைத் தன் வசப்படுத்திக் கொண்டு உன்னைத் தனியிடத்திற்குக் கூட்டிச் செல்வார். அப்பொழுது, இரவும் பகலும் அவர் ஒருவரையே நினைந்து நினைந்து நெஞ்சு கரைந்து ஏங்கிப் புலம்பிய வண்ணம் இவ்விடத்தில் நான் எத்தகைய கொடுந்துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறே னென்பதை, நீ அவ ருக்கு விரிவாக விளக்கிக் கூறு. அவரது வீர வேலைக் கண்டு களிக்க எனது கண்களும்—அவரது காதல் மொழிகளைக் கேட்டு மகிழ எனது செவிகளும்—அவரது திருமார்பில் புரளும் கடம்பமலர் மாலையின் நறு மணத்தை மூகர்ந்து இன்புற எனது நாசியும்—அவரது செங்கனிவா யமிர்தத்தைப் பருகி மகிழ எனது வாயும்—அவரது திருமேனியின் ஆலிங்கனத்தைப் பெற்று ஆனந் திக்க எனது உடலும் எவ்வளவு பேரார்வங் கொண்டு ஏங்கி நிற்கின்றன வென்பதை, நீ அவருக்கு விரிவாக எடுத்துச் சொல்லக் கடவாய். எனது கண்கள் இரண்டும் களிக்க இங்கு வந்து சேர்ந்து—எனது உடலும் உயிரும் ஒருங்கே பரவச மடையும்படி என்னுடன் கலந்து—கருத்தொருமித்த காத லின்பத்தை அனுபவிக்குமாறு, உனது தேனினும் தீஞ்சுவை வாய்ந்த மணி மொழிகளால் அப் பெருமானைத் தூண்டக் கடவாய்.

ஒருநாள், மேற்றிசையில் விரைந்து இறங்கிக் கொண்டிருந்த செஞ்சுடர் கதிரவன், நாற்றிசைகளிலும் தனது பொன்னிறக் கிரணங்களைப் பரப்பி எல் லாப் பொருள்களின் மேலும் பொன் மூலாம் பூச முயன்று கொண்டிருந் தான். நீல வானத்தில் திரிந்து கொண்டிருந்த மூகில்கள், பலவகைப்பட்ட இந்திர ஜால வித்தைகளைச் செய்து கொண்டிருந்தன. பகல் முழுவதும் பசும் புலங்களில் வயிறார மேய்ந்து மனம் போனவாறு திரிந்து கொண் டிருந்த பசுக்களெல்லாம், தங்களது கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணிகள் கண கண வென்று ஒலிக்க ஊரை நோக்கித் திரும்பிச் சென்றுகொண் டிருந்தன. தெளிந்து குளிர்ந்த நீர் நிறைந்திருந்த தொரு குளத்திலே மலர்ந்திருந்த செவ்வல்லி மலர்கள், பகற் பொழுது முழுதும் தனது ஒளி பொருந்திய பொற்கிரணக் கைகளால் தங்களைத் தழுவி நின்று மகிழ்வித்த கதிரவனாகிய காதலன் மேற்றிசையில் மறையத் தொடங்கியதன் பயனாக, விரித்திருந்த இதழ்களைக் குவித்து மூடிக்கொண்டு விட்டன. கதிரவனாகிய தமது காத லனின் பிரிவாற்றாமல் நகையிழந்து ஒளி இழந்து உருவைச் சுருக்கி ஒடுங்கி நின்ற செவ்வல்லி மலர்களைக் கண்டு பரிகசித்துச் சிரிப்பனவே போல், அந்த குளக்கரையில் வளர்ந்திருந்த முல்லைச் செடியில் நிறைந்திருந்த முல்லை மலர்

கள், தமது காதலனாகிய மோகன சந்திரனிடம் கொண்ட மோகச் செருக்கினாலே சின்னஞ் சிறு மெல்லிய இதழ்களை விரித்துச் சிரித்து நின்றன. தனது சகோதரிகளாகிய செவ்வல்லி மலர்களின் துயரத்தைக் கண்டு அனுதாபப் படுவதற்குப் பதிலாக, பரிகசித்துச் சிரிக்கவும் துணிந்து விட்ட முல்லை மலர்களின் மேல் எனக்கு அடக்க முடியாத கொடுஞ்சினம் தோன்றியது. அவ் வெஞ்சினத் தீயின் கொதிப்பினால் பொறுமையை இழந்த நான் அம் மலர்களை எட்டி உதைக்க முயன்றேன்; அவ் வேளையிலே எனது கால் சுளுக்கிக் கொண்டு விடவே, 'அம்மாடி' யென்று காலைப் பிடித்துக் கொண்டு பசும்புல் தரையில் உட்கார்ந்து கொண்டு விட்டேன். அப்பொழுது, என்னருகிலிருந்த எனது இன்னுயிர்க் காதலராகிய முருகப் பெருமான் கலகலவென்று சிரித்து, என்னை நோக்கி என்ன சொன்னார் தெரியுமா?

"அடி, பேதாய்! இந்த எளிய முல்லை மலர்களின் மேல் உனக்கேன் அவ்வளவு கோபம்? மேற்றிசையில் மறையும் தமது காதலனாகிய செங்கதிரோனைக் கண்டு அச் செவ்வல்லி மலர்கள் துயரப் படுவதாகக் கொள்வானேன்? எது எவ்வாறாயினும், நாளை காலையிலேயே மீண்டும் அவற்றிற்குக் கதிரவன் காட்சியளிப்பது உறுதியேயன்றோ? தமது காதலனைப் பிரிந்து ஓரிரவு கூட தரித்திருக்கக் கூடிய மனவுறுதி அவற்றிற் கில்லாமற் போய் விட்டதா என்ன? தவிர்க்க முடியாத கடமையினாலே காதலன் வெளியில் செல்ல வேண்டி யிருந்தால், அவன் மீண்டு வந்து சேருமளவும் அவனது வடிவை நெஞ்சுக்குள் கண்டு களித்துக்கொண்டு பிரிவின் துயரை மறந்திருக்கக் கூடிய சக்தியில்லாத காதலியின் காதலை, உண்மையான—உறுதியான—கலங்காத காதல் என்று எப்படி நம்பமுடியும்?"—என வினவினார் அவர்.

அவரது மொழிகளைக் கேட்டு பெரிதும் வெகுண்ட நான், அவரோடு பிணங்கிக் கொண்டு அப்பால் வந்து தலை குனிந்து நிலத்தை நோக்கிய வண்ணம் கண்ணீர் சொரிந்து நின்றேன். அதைக் கண்டு பெரிதும் மனம் பதைத்த அவர், எனது கோபத்திற்குக் காரணமென்ன வென்று என்னை வினவினார்.

"காதலரின் பிரிவினால் விளையும் கடுந்துயரம் எத்தகையதென்பதை கற்பிற் சிறந்த மாதர்கள் அறிவார்களே யன்றி, உங்களால் எவ்வாறு உணர்ந்து கொள்ள முடியும்? அணைத்த கை நெகிழ்த்தவளவில்—அதைக் கூட சகிக்க முடியாத வாறு உள்ளத்தில் பொங்கித் ததும்பும் உத்தம பத்தினிகள் உரிய காதலைச் சந்தேகிக்க, உங்கள் மனம் எப்படித்தான் துணிந்ததோ? இப்பொழுது எவ்வளவோ பேரன்புடையவரைப் போல் நடந்து கொள்ளும் தாங்கள், என்னை விட்டுப் பிரிந்து சென்று பல தினங்கள் மீண்டு வராமலே நின்று விட்டால், அப் பிரிவினால் விளையக் கூடிய பெருந்துயரை எனது எளிய மனம் எவ்வாறு சகித்துக் கொள்ளக் கூடும்? இப்பொழுது உங்களுடன் கூடிக் கலந்து குலவிக் கொண்டிருந்து விட்டு பின்னால் இந்த சம்பவத்தை எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருப்பதை விட, தங்களது மாய மோக மொழிகளில் மதி மயங்காமலே தப்பித்துக் கொண்டு விடுவது நலமன்றோ?"—என்றேன் நான்.

அதைக் கேட்ட அவர், தமது இடத்திருக்கரத்தை, எனது தோளின் மேல் வைத்து, தமது வலத் திருக்கரத்தால் எனது வலது கையை மெதுவா

கப் பற்றிக் கொண்டு, கெஞ்சிக் கொஞ்சும் குரலில் பின்வருமாறு கூறினார்:—

"என் கண்மணியே! எனது இன்னுயிர்க் காதலியே!! உன்னிடம் நான் கொண்டுள்ள சீரிய மெய்க்காதல் எத்தகைய தென்பதை, இன்னும் நீ உணர்ந்து கொள்ள வில்லையே! உனது மன உறுதியைச் சோதிக்கக் கருதி சிற்சில மொழிகளைக் கூறினால், அதன் பொருட்டு நீ என்னுடன் இத்தகைய ஊடல் கொண்டு விடலாமா? எப்பொழுதும் என் மனத்தில் குடிகொண்டிருப்பவள், நீ ஒருத்தியேயல்லவா? உன்னிடம் நான் கொண்ட காதல், என்றேனும் என்னால் மறந்து விட முடியுமோ? இன்னும் என்னிடத்தில் உனக்கு என்ன சந்தேகம்? எனது இன்னுயிர்க்கு இன்பூட்டக் கூடியவள், நீ ஒருத்தியேயன்றோ? சிற்சில சமயங்களில், நான் உன்னருகில் இல்லாவிடினும், என் மனம் உன்னொருத்தியையே நாடி நிற்கு மென்பது உறுதி. கருத்தொருமித்த காதலர்களுக்குப் பெருமகிழ்வூட்டும் இந்த அந்தி வேளையிலே உல்லாஸமாக ஸல்லாபித்திருந்து மகிழ்வதை விட்டு, நீ என்னுடன் பிணங்கி நிற்பது முறையோ? உனது நெஞ்சிற் கொண்ட சந்தேகங்கள் அனைத்தையும் அகற்றி, அகமும் முகமும் ஒருங்கே மலர்ந்து, உனது செங்கனிவாயினால் ஒரு முத்தம் தாராயோ? உனது ஸல்லாப மொழிகளைக் கேட்டு ஆனந்திக்கத் துடி துடித்துக் கொண்டிருக்கும் எனது இன்னுயிரின் பேராவலைத் தீராயோ?"

—அவ்வாறு கூறிய ஆறுமுகப் பெருமான், என்னைத் தழுவியணைத்து, எனது செவ்விதழ்களிலும் கன்னங்களிலும் மாறி மாறிப் பன்முறை முத்தமிட்டு மகிழ்ந்தார். அப்பொழுது, எனது ஆன்மா அனுபவித்த ஆனந்தம் எத்தகைய தென்பதை எவ்வாறு கூறுவேன்? அச் சம்பவம் முழுவதையும் அன்று அவர் கூறிய காதல் மொழிகள் அனைத்தையும்—அடியோடு மறந்து விட அப் பெருமான் எப்படித் தான் கற்றுக் கொண்டு விட்டா ரென்பதைக் கேள்.

மற்றொரு நாள், வெங்கதிரோன் தனது வெப்பம் மிகுந்த கிரணங்களைச் செலுத்தி உயிர்களைப் பெரிதும் வாட்டிக் கொண்டிருந்த கொடிய வெய்யிலிலே, எத்தகைய நீரும் நிழலும் இல்லாத தொரு பாலைவனத்திலே, அப் பெருமான் எனது கையைப் பற்றி வேகமாக அழைத்துச் சென்றார். அப்பொழுது, வெங்கதிரோனின் வெப்பத்தைச் சகிக்க முடியாமல் தீயில் விழுந்த புழுவைப் போல் பெரிதும் துடிதுடித்த நான், அவரை நோக்கி "உங்களுக்கு என்மேல் உண்மையன்பு இருந்தால், இந்த நெடிய பாலை வனத்திலே—இவ்வளவு கொடிய வெய்யிலிலே—என்னை அழைத்துச் செல்ல ஒருப்படுவீர்களா?"—என்று வினவினேன். அதைக் கேட்ட அப் பெருமான் சட்டென்று நின்று, தனது வலக்கையில் பிடித்திருந்த வீர வேலை இரு கரங்களிலும் வைத்துக்கொண்டு, என்னை நோக்கி, "இதோ, இந்த வேலின்மேல் ஆணையாகக் கூறுகிறேன்; உன்னிடம் நான் கொண்டுள்ள காதல், எனது ஹிருதய பூர்வமானதேயாகும். உனது பஞ்சினும் மெல்லிய மலரடிகள் பெரிதும் வருந்தக் கூடுமே என்னும் பரிவு கருணையற்ற கடுங்கதிரோனுக்குச் சிறிதும் இல்லாமையால், அவன் தனது சக்தி முழுவதையும் அபலையாகிய உன்னிடம் காட்டுகிறான் போலும்! இத் துன்பத்தை இன்னும்

# அருணகிரிநாதர்

—:(o):—

(K. V. நாகமாணிக்கம்.)

"வாக்கிற் கருணகிரி" எனப் பலரும் பாராட்டிக் கொண்டாடும் இவ்வருணகிரியாரின் வாக்கின் வளமும், பாக்களின் பொருள் அழகும் வியக்கத் தகுந்ததாகும்.

இவரது சரித்திரத்தை ஆராயப்புகின் பலர் பலவிதமாகக் கூறுகின்றனர். இவர் காலம் சுமார் ஐந்நூறு ஆண்டுகளிருக்கும். அதாவது கருநட வேந்தன் என்று சொல்லப்படும் பிரபுட தேவராயன் என்னும் அரசனுடைய காலமென்று இவர் பாடிய திருப்புகழால் அறியலாம். இவருடைய உறைவிடம் வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள திருவண்ணாமலை. சைவசமயத்தில் தேவகணிகையர் குலததில் பிறந்தவரென்பது ஒரு சாராரின் கூற்று. மற்றொரு சாராரின் சொல்படி இவர் ஒரு செட்டியாருக்குப் பாத்தை மாதிடம் பிறந்தவரென்று சொல்லப்படுகின்றது. சிலர், இவரைப் பட்டினத்தடிகள் குமாரர் என்று சொல்கின்றனர். இவருடைய இளமைப் பருவத்தைப்பற்றி ஒருவரும் ஒன்றும் கூறியதாகத் தெரியவில்லை. இவர் தன் இளமைப்பருவத்திலேயே தம் தாய் தந்தையரை துறந்தனராதலால், இவருடைய கல்வி வளர்ச்சிக்கு இடமின்றிப் போய்விட்டது. அதனால் சிறு பருவத்திலிருந்தே தம் சகோதரியின் வீட்டிலிருந்ததாகச் சொல்லப்படுகின்றது. அவ்வமயம், இவர் தான்தோன்றியாகவும், ஸ்திரீ லோலராகவுமிருந்தார். மேலும் இவர் பெண்கள் விஷயத்தில் பெரும் பணத்தைச் செலவு செய்தார். தன் சகோதரியிடமிருந்து பணம் வருவாய் குறைந்ததினுல், இவர் இவ்வுலக வாழ்க்கையை வெறுத்து தற்கொலை புரிந்துகொள்ள எண்ணி, ஒரு கோபுரத்தின் மேலேறி

---

சற்றே பொறுத்துக் கொள். அதோ, எனது ஆலயத்தின் கோபுரம் தெரிகிறது பார்! இன்னும் சில கணங்களில் நாம் அங்கு சென்று சேர்ந்து விடுவோம்; இனி, நீ சிறிதும் அஞ்ச வேண்டுவதில்லை.'—என்று கருணை ததும்பும் சொற்களால் எனது துயரத் தீயை விரைவில் அணைத்து விட்டார். அப்பொழுது அவர் கூறிய அந்த விந்தை மொழிகளை இப்பொழுது நினைத்துக் கொண்டு விட்டாலும், எனது மனம் பெரிதும் ஏங்குகிறது. அவர் அன்று கூறிய மொழிகளை மீண்டும் ஒரு முறை சிந்தித்துப் பார்த்தருளுமாறு, நான் அவரைப் பெரிதும் வேண்டிக் கேட்டுக் கொண்டதாக அவரிடம் நீ சொல்ல வல்லாயோ?"

[இக் கட்டுரை, தேசீயக் கவியரசர் திரு—சி. சுப்பிரமணிய பாரதியாரவர்கள் இயற்றிய "முருகன் மீது கிளி விடுதூது"—எனும் கவிதையின் கருத்தை ஆதாரமாகக் கண்டு எழுதப்பட்டது.]

பல தடவை கீழே விழுந்தும் இவருடைய எண்ணம் ஈடேறவில்லை. இவர் கடைசி முறையாக கீழே விழுந்தபோது முருகபிரான் ஒரு பிராமண வடிவு கொண்டு இவர் முன் தோன்றி சில உபதேசங்களை இவருக்கு உபதேசித்து "எம்மைப் பாடிக் கொண்டிரும்" என்று சொல்லிவிட்டு மறைந்தார். இதனை,

சின்னங் குறித்தடி யென்செவி நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாண முயன்றவனே.

என்ற கந்தரலங்காரச் செய்யு (24-வது பாட்டு) ளால் அறியலாம்.

இதன் பிறகுதான் இவர் கந்தரலங்காரம், கந்தரனுபூதி திருவகுப்பு வேல் விருத்தம், உடற்கூற்று வண்ணம் முதலிய நூல்களை இயற்றினர்.

இவர் காலத்தில் திருமுனைப்பாடி நாட்டிற் சனியூரிற் பிறந்த பெரியாழ்வார் என்று சொல்லப்பட்ட வில்லிபுத்தூரார் என்னும் வைணவ அந்தணர் ஒருவரிருந்தார். இவர் ஒவ்வொரு புலவரையும் தம்முடன் வாதுக்கழைத்து, தன்னிடம் தோற்றால் அவர்களின் காதைக் குடைந்து குறும்பி யளவாக வெட்டி விடுவார். ஒரு சமயம் இவர் அருணகிரியாருடன் போட்டி இட நேரிட்டது. அவ்வமயம்,

திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்ததி தித்திதத்த தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே.

என்று அருணகிரியார் பாடிய பாட்டிற்கு வில்லிபுத்தூரார் பொருள் கூற முடியவில்லை. அதனால் தான் தோற்றதாக ஒத்துக்கொண்டு, அன்று இருந்து மற்றைய புலவர்களின் காதைக் குடையவில்லை யென்று பிரமாணிக்கம் செய்தார்.

மற்றொரு சமயம், திருவண்ணாமலையி லிருந்த சம்பந்தாண்டான் என்னும் ஒரு தேவி உபாசகரை அனேக விதங்களில் வென்றதாக பல கதைகள் சொல்லப்படுகின்றது. ஒன்று முருகனை தத்ரூபமாக அரசசபையில் வரவழைத்தது; மற்றொன்று பாரிஜாத மலர் கொணர கிளி உருக்கொண்டு தெய்வலோகம் சென்றது.

இவருடைய செய்யுள்களை ஆராய்ந்தால், இவர் சந்தவிருத்தம் செய்வதில் வல்லவரென்று தெரிகின்றது. அவைகளில் ஒரு சிலவாவன: "சரண கமலாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்", "ஏறுமயிலேறி விளையாடுமுக மொன்றே" முதலியன. மேலும் இவர் தம் தம்பிக்கு அறிவூட்ட திருவக்கபாகையி லாண்ட கொங்கர்குல அரசனின் வேண்டுகோளின்படி பாரதம் பாடியதாகவும் சொல்லப்படுகிறது.

அப் பாரதச் செய்யுளில் ஒன்றாவன:

கோவல்சூழ் பெண்ணை நாடன் கொங்கர்கோன் பாவை வேந்தன்
பாவலர் மானங்காத்தான் பங்கயச் செங்கை யென்ன

மேவல ரெமரென்ளுமல் வெங்களக் தன்னி னின்ற
காவலன் கன்னன்கையும் பொழிந்தது கனகமாரி.

இவருடைய முடிவைப்பற்றி பலர் பலவிதமாகக் கூறுகின்றனர். இவர் கிளி உருக்கொண்டு தேவலோகம் சென்றிருந்த சமயம், சம்பந்தாண்டான் இவருடைய உடலைத் தகனஞ்செய்து விட்டதாகத் தெரிகின்றது. இதை யறிந்த கிளி தேவலோகத்தில் தேவியின் காத்திலேயே பாடிக்கொண் டிருப்பதாகச் சொல்லப்படுகின்றது.

மற்றுஞ் சிலர், இவர் கிளி உருவுடனே பாரிஜாத மலர் கொணர்ந்து, பின் தம் சக்தியினுல், தாம் தெய்வ லோகம் சென்றிருந்த சமயம் சம்பந்தாண்டான் செய்த எல்லாவித சூழ்ச்சிகளையும் அரசனுக் கறியப்படுத்தி, அவனை தண்டனைக் குள்ளாக்கி, பின் தன் வாழ்நாட்களைக் கிளி உருவத்துடனேயே இருந்து அனேக பாக்கள் இயற்றி, பிறகு இவர் கிளி உருவத்துடனேயே முக்தி அடைந்ததாகச் சொல்லப்படுகின்றது.

"கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன—எந்தை
யருணகிரி."

என்று தாயுமானவர் இவரைப்பற்றி சிறப்பாகச் சொல்கின்றூர். மற்றும்,

"ஐயா! அருணகிரி அப்பா! உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்? வையகத்தோர்
சாற்றரிதென் றேசற்றூர் தன்னனையாய் முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னன்."

என்று தாயுமானவரே மற்றொரு இடத்தில் அருணகிரியாரைப்பற்றி போற்றிக் கூறுகிறூர். என்னே இவரது வாழ்க்கையின் சிறப்பு!

---

# ஆபுத்திரன் வரலாறு

(பெ. ராமாநுஜம்.)

## 10. அறத்தின் சோதனை.

நம் இந்திய நாட்டின் தென்கிழ்த் திசையில் சாவகநாடு என ஒன்று உண்டு. நீர்வளமும் நிலவளமும் உடையது. "கன்னல் கழனின் எழில் காட்டும்" என்பது அந்த நாட்டில் பயிராகும் கரும்பிற்குத்தான் பொருந்தும். பருமனிலும், நீளத்திலும் சிறந்து விளங்குவதைப் போலவே இனிப்பிலும் இணையற்றது. "ஜாவா" சர்க்கரையென நம் நாட்டில் விலையாகும் அதனோடு நமது நாட்டில் உண்டாகும் சர்க்கரை போட்டிபோட இயலாததை நாம் இன்றும் காண்கிறோம். அத்தகைய நாட்டில் பல வருடங்களாகப் பருவமழை இல்லாது போயிற்று. அதனால் அங்கு மக்கள் உணவின்றி வருந்தினர். விலங்குகளும், பறவைகளும் உணவில்லாது மடிந்தன. பருகுதற்கும் நீர் அரிதாயிற்று. அச்சமயத்து ஆபுத்திரன் புகழ் சாவக நாட்டில் பரவியது. "அவ்வறமகன் உதவியால் நம் நாடு நலம்பெறும்; ஆதலின் அப்பரமோபகாரியை இங்கு அழைத்து வருவோம்" என்று வணிகர் சிலர் கப்பல் ஏறிக் கொற்கையம்பதியில் இறங்கி, அந்நகர் மக்களிடத்து "ஆபுத்திரன் யாண்டுளன்?" என வினவினர். அவர்கள் "அவன் மதுரையம்பதியில், சிந்தாதேவியின் அம்பலத்தில் அனைவர்க்கும் உணவு தந்து உயிர் அளித்து வருவதாகக் கேள்வி யுற்றோம்; இப்பொழுது பாண்டிய நாட்டில் பசிப்பிணி யில்லை; அதனால் அவன் அவ்வம்பலத்திலேயே வதிகின்றனனோ, வேறிடம் சென்றனனோ அறியோம்" என்றனர். சாவகநாட்டு வணிகர் மதுரை மூதூர் அடைந்து, கலைமகள் நிலய மன்றத்துள் ஆபுத்திரனைக் காண நுழைந்தனர். அங்கே சூதாடுவோரும், வீண் உரை பேசுபவரும், மதுக்களியால் மதிமயங்கித் தாம் செய்வது இன்னது என்று அறியாது தடுமாறும் கட்குடியரும் ஆய தீய மக்கள் நிறைந்திருப்பதைக் கண்டு, "இக்குழுவிலா நாம் விரும்பிவந்த அறமகன் இருப்பான்?" என்று தடுமாற்றம் அடைந்தனர். அங்கு இருந்தவருள் ஒருவனை அணுகி, "ஐய, கையில் உண்ணும் பாத்திரம் ஏந்தி அனைவர்க்கும் அமுது அளித்த புண்ணியன் எங்கே?" என்று வினவினர். "புண்ணியனும் இல்லை, கண்ணியனும் இல்லை; போ" என்று பதிலளித்தான் அவ்வெறியன். இம்மறு மொழியால் மனம் வருந்திய வணிகர் மேல் ஒன்றும் கூறாது, அம்பலம் நீங்கி மதுரை நகரின் பெருந்தெரு ஒன்றை யடைந்து, அங்கே நடமாடும் மக்களிடத்து ஆமகனை அறிய முயன்றனர். அவர்கள் கூறிய மறுமொழி அம்பலத்தில் வெறியன் கூறிய மொழியினும் கலக்கம் தருவதா யிருந்தது. "ஆபுத்திரனா? அனைவர்க்கும் சோறு வழங்கினனா? உங்கட்கு ஏதேனும் பித்தேறியதோ?" இவை போன்ற மறுமொழியே அனைவரும் கூறக் கேட்டனர். என் செய்வார் பாவம்! "ஆமகன் அம்பலத்தில் இருப்பான். அவனிடம் தமது குறையைக் கூறினதும் மிக்க மகிழ்ச்சி யுடையவனாய்த் தம்

மோடு வந்து உறுதுயர் நீக்குவான்'' என்ற எண்ணத்தோடு வந்த வணிகர் மனம் உடைந்தவராய், அம்மதுரை நகரின் தெருவழியே சென்று கொண்டிருந்தனர். அது சமயம் அத் தெருவிலேயே பொலிவு இழந்த முகமும், புழுதிபடிந்த ஆடையும், வாடிய மேனியும் உடைய ஆமகன் கையில் தெய்வக் கடிஞை யேந்தி தளர்ந்த நடையுடன் வந்தான்.

அவன் அப்பொழுது உள்ள தோற்றத்தால், ''இவன் ஆமகனோ, அல்லனோ?'' என வணிகர் ஐயுற்று, ''ஐயா! தாங்கள் யார்?'' என வினவினர். ''யான் ஒரு பேயன்'' என்றான் ஆமகன்.

''நாங்கள் இந் நகரில் வாழ்பவருக்கு ஒரு தீங்கும் புரிந்ததில்லை; அங்ஙனமாக எங்கள் மொழிக்கு ஒருவராவது செவி கொடாதது எங்கள் தீவினையே போலும்.''

''அன்புடையீர்! உங்களை அவமதிப்பதாக நினைக்க வேண்டாம்; உண்மையில் யான் ஓர் பேயனே''

''ஐய, நீர் பேயன் என்றால் நாங்கள் ஏற்போமா?''

''உருவத்தில் யான் மனிதனைப் போன்றவன்தான்; ஆனால் செயலில் பேயனே யாவேன்; உலகு அனைத்தும் பசியற்று வாழ்வதற்கு உரிய ஓர் அரிய பொருள் என்பால் இருந்தும், அதனைப் பயன் படுத்தும் வழியறியாது, யானும் அநுபவியாது வைத்திருக்கிறேனென்றால் யான் பேயனன்றி மனிதன் ஆதல் கூடுமோ?''

''கருணை வடிவே! தங்களைக் காணவேண்டியே இம் மதுரைமாநகரின் ஒவ்வொரு பகுதியும் தேடினோம். எங்கும் காணப்பெறாது மனச்சலிப்போடு வருகையில் இறைவன் திருவருள் தங்களை இங்குக் கூட்டுவித்தது.''

''என்னையா? இந்தப் பேதையையா தேடினீர்கள்?''

''தாங்களா பேதை? தங்களால் உயிர்பெற்ற அப்பெரு நன்றியை மறந்து வாழும் இந்நாட்டு மக்களன்றோ பேதையர்''

''யான் ஒருவருக்கும் உயிர் அளிக்கவில்லை, உதவி புரியவுமில்லை; எனது அன்னையின் அருளால் கிடைத்த இத் திருவோட்டினைக் கொண்டு பணியாற்றி வந்தேன்; அவ்வளவே யான் செய்தது. இப்பொழுது யான் இருக்கும் இந் நிலைக்கு யானே காரணமாவேன்.''

''அஃது எவ்வாறாயினும் ஆகுக; நாங்கள் சாவக நாட்டில் வாழ்பவர்கள். அந் நாட்டில் பல வருடங்களாக மழையில்லை; மக்களிற் பலர் உணவு இல்லாமல் மடிந்தனர்; பின்னும் சிலர் எலும்புக்கூடு என இருக்கின்றனர்; விலங்கு, பறவைகளின் நிலைமையை விளம்பலே மிகை. அறவடிவே! இக்குறை நீங்க எங்கள் நாட்டிற்கு இன்றே எழுந்தருளல் வேண்டும்.''

''இதற்காகவா இத்துணை வேண்டுதல்! என் கடன் அன்றோ இப்பணியாற்றுதல்; இன்றே புறப்படுகின்றேன்; ஒரு கன்னிப்பெண் மணமகன் அகப்படாது வறிதே மூத்தாற்போல, இந்திரன் ஆணையால் இரப்போர்

பெறாது வீணே சுமந்த இத் தெய்வத் திருக்கலம் பயன் படுமாறு இன்றே புறப்படுகிறேன்.''

பின்பு வணிகர் ஆபுத்திரனை அழைத்துக்கொண்டு கொற்கை நகர் அடைந்தனர். அந்நகரி னின்றும் சாவகநாடு நோக்கிப் புறப்பட்ட கப்பலில் ஆமகனும், வணிகரும், பிறரும் சென்றனர். கப்பல் சிறிது தூரம் சென்றதும், பெருங்காற்று வீசத் தொடங்கிற்று. கடல் அலைகள் வானத்தைத் தொடுவனபோல் மேல் எழும்பி யெழும்பி விழுந்தன. மரக்கலம் மேலும் கீழுமாக அசைந்து கடலில் மூழ்கி விடும்போல் இருந்தது. மாலுமியால் நாவாயை ஒழுங்காகச் செலுத்த முடியவில்லை. அது கள்குடித்தவனைப் போல் சுழன்று சுழன்று ஓடி மணிபல்லவம் என்னும் ஓர் தீவை அடைந்தது. புயல் நின்ற பின்னரே நாவாய் அத்தீவினின்றும் செல்லுமாகலின், அதற்குள் அத்தீவின் இயற்கை யழகைக் காண விரும்பி, ஆபுத்திரனும் வேறு சிலரும் அக்கப்பலி னின்றும் இறங்கினர். ஆங்காங்கே வெண்மணற் குன்றுகள் கண்ணைக் கவரும் வனப்புடையவாய் இருந்தன. புன்னையும் தாழையும் சூழ்ந்து விளங்கும் அழகிய நீர்நிலைகள் பல, இடையிடையே இருந்தன. சில இடங்களில் தென்னந் தோப்புகளும், பனைமரச் செறிவும் விளங்கின. இக் காட்சிகளைக்கண்ட ஆமகனும் பிறரும் மாலைச் சூரியனின் பொன்னிறக் கதிர்கள் வெண் மணலிலும், பசுமைச் சோலைகளிலும், கருங்கடலிலும் பாய்ந்து பொலிவதை யறிந்து நாவாய் தங்கியுள்ள கடற்கரையை அடைந்தனர். அப் பெருங்கடலின் கொந்தளிப்பு ஒரு சிறிதும் அடங்கவில்லை. மக்கள் அனைவரும் கடற்கரை மணலில் தத்தம் மேலாடையைப் பரப்பி வீற்றிருந்தனர். ஆமகனும் அவ்வெள்ளிய நுண்மணலில் தன் மேலாடையை விரித்து அமர்ந்தான். கடுங்காற்றும் பேரலையும் மக்கள் மனதை அச்சம் ஊட்டி வருத்துவது போதாது என்று இருள் என்னும் கரும்பேயும் மெல்ல மெல்லத் தலைகாட்டலாயிற்று. அப்பேயைக் கண்டு அஞ்சி வீழ்ந்தவர்போல் மணலில் அயர்ந்து படுத்த அனைவரும் கருங்கடலில் மூழ்காது தப்பினாராயினும் துயிற் கடலில் மூழ்கலாயினர். ஆனால் கப்பல் தலைவனும் வேறு சிலரும் காற்று அடங்கும் அமயத்தை யெதிர்பார்த்து உறங்காதிருந்தனர்.

இரவு நாழிகை பதினைந்து ஆயிற்று. காற்றின் வலிமை சிறிது சிறிதாகக் குறைந்துவந்தது. முன்பு இராமபிரான் ஆணையால் கடல் ஆரவாரம் இன்றி அடங்கியிருந்ததுபோல, புயற்காற்றின் வலிமையால் அலைவீசி நின்ற கடல் காற்று நின்றதும் அலையொழிந்து அமைதி பெற்றது. மணல்மேல் படுத்து உறங்கிய மக்களை யெழுப்பும் பொருட்டுக் கப்பல் தலைவன் சங்குஒலி எழுப்பினான். அனைவரும் எழுந்து அவசரம் அவசரமாக நாவாயில் ஏறினர். நாவாய் சிறிது பொழுதில் புறப்படப் போவதை அறிவித்தற்கு அறிகுறியாக மீண்டும் ஒரு முறை சங்குஒலி எழும்பிற்று. அங்கும் இங்குமாக இருந்த அனைவரும் மரக்கலம் அடைந்தனர். மூன்றாவது முறை சங்குஒலி கிளம்பிற்று. கப்பலும் சாவகம் நோக்கிச் சென்றது. நெடுந்தூரம் சென்ற பின்னர் பொழுது புலரும் தறுவாயில் மரக்கலத்தில் "ஆபுத்திரனைக் காணவில்லை" என்ற ஆரவாரம் மிகுந்தது. கடலில் தவறி விழுந்திருப்பனோ என்று ஐயுற்று அலமந்தனர். பல விடங்களில் தேடித்திரிந்து அழைத்து வந்த வணிகமக்கள், தங்கியிருந்த அத் தீவிலேயே அயர்ந்து உறங்கி யிருப்பனோ என்று ஐயுற்றுக் கலத்தினை அத்தீவிற்குச் செலுத்தினர். உண்மையும் அதுதான். இந்திரன் வஞ்சினம்

பலித்த நான்முதல் உண்போர் பெறாமையால் தானும் உணவின்றி மெலிவுற்றானாதலின் ஆமகன் அத் தீவிலேயே மரக்கலம் செல்வதை அறியாது உறங்கி விட்டான். உறங்கினவன் கீழ்த்திசை வெளுக்கும் சமயம் கண் விழித்தான். ஒரு புறம் ஒரே கருமைநிறம் வாய்ந்த பெருங்கடல்; மற்றொரு புறம் வெள்ளிய மணலின் பரந்தவெளி. தன் அருகில் மணல்மேல் படுத்துறங்கிய வணிகரையோ, பிறரையோ காணான்; கடலில் கலத்தையும் காணான்: "அந்தோ, என் செய்வேன்? பல நாட்களாய் இரப்போர் பெறாது அருங்கலத்தை வீணே சுமந்த எளியேனைப் பேரன்போடு அழைத்து வந்த பெருமக்கள் என்னைத் தனியே இத்தீவில் விடுத்துச் சென்ற தீவினைக்கு என் செய்வேன்? இதுவும் அவ்வானவர் தலைவனின் சூழ்ச்சியாமோ? இப் பிறவியில் ஏழையேன் மனதறிய எவர்க்கும் தீங்கு நினைத்திலேன். அங்ஙனமாகவும் இக் கடுந்துயர் என்னைவிட்டு நீங்காமை பழவினையின் பயனாமோ?" என்று பலவாறு வருந்தினான்.

"இத்தீவில் எவரேனும் வசிப்பின் அவர் பசியையாவது நீக்க இவ்வுண்கலம் பயன்படும்" என்று கருதி அத்தீவின் பற்பல இடங்களில் அலைந்து திரிந்தான். புன்னையும் தாழையும் நிறைந்த நீர்த்துறைகளிலும், அவற்றைச் சூழ்ந்த நெடிய மணற் குன்றங்களிலும், ஆம்பலும் குவளையும் மலர்ந்து அழகுடன் பொலியும் ஆழமான பல பொய்கைக் கரையிலுமாகப் பல விடங்களில் அலைந்து தேடியும் அங்கு வாழ்வோர் எவரையும் காணான். அதனால் கன்றிய மனதுடைய ஆமகன், "பல உயிரைக் காப்பாற்றுதற்கு உரிய இப் பாத்திரத்தைக் கொண்டு என் ஒரு உயிரைக் காப்பதற்கோ இதனைச் சுமந்து திருகின்றேன்? இங்கேயுள்ள இப் பொய்கையில் இப்பாத்திரத்தை யெறிந்து எனது உயிரையும் மாய்த்துக் கொள்வேன். எனினும் இவ் அருங்கலம் ஒருவருக்கும் பயன்படாமற் போகவிடேன்; அறச்செயல் பூண்டு எவ்வுயிரும் காப்பாற்றுவோர் எவரேனும் இங்குவரின் அவர் கைப்புகுவாயாக" என்று கூறி, பசிப்பிணி போக்கும் பலர் தொழும் ஓட்டினை—தெய்வ பாத்திரத்தைக் "கோமுகி" என்னும் அப் பொய்கையில் விடுத்தான்.

அதுபொழுது அறவண வடிகள் என்னும் பெரியார் பாதபங்கயம் எனும் மலையில் புத்த பீடிகையை வணங்கி வருபவர் தற்செயலாக ஆங்கடைந்து, ஆபுத்திரனது சோர்ந்த நிலைமையைக் கண்டு, "அன்பனே! உனக்கு நேர்ந்த துயர் யாது?" என்று வினவினார்.

"அடிகளே! பிறந்த அன்றே தாயைப் பிரிந்த யான் சில நாட்கள் வரை ஒரு பசுவால் வளர்க்கப்பட்டேன். பின்பு வயனங்கோடு என்ற சிற்றூரில் இளம்பூதி யந்தணர் வளர்க்க வளர்ந்து, பல கலைகளிலும் பயிற்சி பெற்று விளங்கினேன். ஒரு நாள் அவ்வூரில் நடந்த வேள்வி யொன்றில் ஒரு பசுவைப் பலியிடுவதற்கு என்று கட்டி வைத்திருந்தனர். அடியேன் அக் கொடுமையைப் பொறாது, அப்பசுவைப் பிறர் அறியாவாறு கவர்ந்து சென்றேன். அதனால் என்னை அனைவரும் 'கள்வன்' என்று வெறுத்து ஒதுக்கி விட்டனர். எளியேன் மதுரையம்பதி அடைந்து வாழ்கையில் சிந்தா தேவி தன்னிற் பெய்த சோறு எடுக்க எடுக்கக் குறையாது வளரும் 'அமுத சுரபி' யென்னுந் தெய்வத் திருக்கலத்தைப் பேரருளோடு அடியேற்குத் தந்து 'இதனால் உலகின் பசித்துயர் களைக' என்று அருளி மறைந்தாள். அன்றிருந்து அடியேன்

பசித்துயர் களைந்து வருகையில், வானவர் கோமான் என்னையணுகி, 'நினது அறத்தின் பயனைப் பெறுக' என்றார். 'இவ் அருங்கலத்திலும் சிறந்தது ஒன்றும் நாட்டில் உளதோ?' என்றேன். அதனால் இந்திரன் வெஞ்சினங் கொண்டு, எனது தெய்வ பாத்திரம் பயன்படாதவாறு, பாண்டிய நாட்டை வளம்பெறச் செய்தான். இரப்போர் பெறாது பல விடங்களிலும் ஏழையேன் அலைந்து திரிந்து கொண்டிருக்கையில், சாவக நாட்டில் மழையில்லாமையால் மக்களும் மாக்களும் உணவில்லாது வருந்துகின்றன ரெனச் சிலர் என்னை வங்கத்தில் ஏற்றி அழைத்துச் செல்கையில், ஐயோ! என் பழவினையே புயல்காற்றாக மாறி, நாவாயை இத்தீவிற் கொண்டுவந்து ஒதுக்கியது. நாவாயில் இருந்து இறங்கிய யான் இத்தீவின் வெள்ளிய மணல்மேல் அயர்ந்து உறங்குகையில், மரக்கலம் பாய் விரித்துச் சென்றது. அதனால் மனம் வெறுப்புற்று அமுத சுரபியெனும் அருங்கலத்தை இப் பொய்கையில் இப்பொழுது தான் எறிந்தேன்'' என்று கூறி முடிப்பதற்குள், அயர்ச்சியாலும், துயர் மிகுதியாலும் ஐயோ! அப் பெருந்தகையாளன் ஆருயிர் கீழ்த்திசை தோன்றி உலகின் இருளை யொழித்து, மேல் திசை சென்று மறையும் ஞாயிறு போல அவன் உடலினின்று பிரிந்தது! அந்த நிகழ்ச்சியால் மனம் நொந்த அறவண அடிகள் அங்கிருந்து அகன்றார்.

மீண்டு வந்த மரக்கலம் மணி பல்லவத்தை யடைந்ததும், அதனின்று வணிகரும் பிறரும் இறங்கி ஆமகனைத் தேடினர். அத்தீவின் பல விடங்களில் தேடி, இறுதியாகக் கோமுகி யென்னும் பொய்கையின் அருகே, புன்னைமர நீழலில், வெள்ளிய மணல்மேல் அயர்ந்து உறங்குபவன்போல் கிடந்த ஆமகன் உடலைக் கண்டனர். உண்மையில் அவன் உறங்குகின்றான் என நினைத்து, அவனை யெழுப்ப முயன்று அவனது உடலைத் தொட்டனர். உடலிற் சூடில்லை; குருதி ஓட்டமில்லை. "ஐயோ! என்ன பாவத்திற்கு ஆளானோம்! இந்திரன் செய்த செயலிலும் எமது செயல் மிகப்பழிக்கு இடமாக முடிந்ததே'' என வருந்தி, அவனை அழைத்து வந்த வணிகர் ஒன்பதின்மரும் அங்கேயே உயிர் விடுத்தனர். கேட்போர் நெஞ்சைப் பிளக்கும் இந் நிகழ்ச்சியை உடன் இருந்து கண்ட வேறு சிலரும் மனம் உடைந்து உயிர் நீத்தார்! "தருமமே செயம்" என வாழ்ந்த ஆபுத்திரனது வாழ்க்கை, அந்தோ! இவ்வாறு முடிந்தது!






# 47. வெஸ்லி சகோதரர்களும் புனருத்தாரண வேலைத் திட்டங்களும்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

இங்கிலாந்தில் சீர்திருத்த உணர்ச்சி இயற்கையாகவே தோன்றி மதஸ்தாபனம் எலிஸபெத் ராணி காலத்தில் திட்டப்படுத்தப்பட்டது வாசகர்களுக்கு ஞாபகம் இருக்கவேண்டும். இங்கிலாந்தின் பெரும்பாலான மக்களுக்கு இசைந்த திட்டத்தை ஏற்படுத்திய பெரும்பாலான மக்கள் சம்மதித்ததனால் அதற்கு "Anglicanism" ஆங்க்ளிகானிஸம் —(இங்கிலந்து மக்களின் மதம்) என்று பெயர். அந்த திட்டத்திற்குப் புறம்பான சிறுபான்மையினர் இரு பிரிவினர்கள் கதோலிக்கரும், தீவிர சீர்திருத்த வாதிகளும் (Puritans—பரிசுத்த வாதிகள்) ஆவார்கள். அவர்களில் கதோலிக்கர் என்றால் "சதியாலோசனைக்காரர்கள். கொள்ளை கொலைகளுக்கு அஞ்சாதவர்கள்" என்ற மாதிரியான பய உணர்ச்சி ஏற்பட காரணங்கள் இருந்து, தீவிர பரிசுத்த வாதிகள் செல்வாக்குப் பெற்று உள்நாட்டுப் பெரிய யுத்தம் நடந்த காலத்தில் அரசனுக்கு எதிராகப் போரிட்டு வெற்றி பெற்று குடியரசு ஸ்தாபனம் கிராம்வெல் ஆக்ஷியில் ஏற்பட்டதும் பழைய விவரம் ஆகும். அந்த தீவிர பரிசுத்தவாதிகள் செல்வாக்கு நடைபெற்ற போது, இங்கிலாந்தில் சுகவாழ்வு, சல்லாபப் போக்கு, வேடிக்கை விநோதங்களில் பொழுதுபோக்கு, களியாட்டங்கள், விளையாட்டுகள் போன்ற சந்தோஷ அனுபவங்களுக்கு தடை ஏற்பட்டதும், அதை ஜனங்கள் வெறுத்து, அரசனுடைய ஆட்சி முறையான முடியரசு புனர் ஸ்தாபனம் நடைபெற்று, நாட்டினர் சந்தோஷ வாழ்க்கைப் போக்கையும் பெற்றார்கள் என்பதும் இத்தொடர்ச்சிகளில் விளக்கப்பட்டிருக்கிறது. அந்தப்படி முடியரசின் மீட்சி காலத்தில் (The Restoration) திட்டப்படுத்தப்பட்ட ஆங்க்ளிகன் மதத்திற்கு இணங்காதவர்களைப் பாதிக்கும் சட்டங்கள் செய்யப்பட்டன. பிரஞ்சு அரசன் அம்மான் லூயி XIVன் தூண்டுதலின் பேரிலும் பண உதவியின் பேரிலும் அந்தச் சட்டங்கள் கதோலிக்கரை மட்டும் பாதிக்காதபடி அரசன் தனது தள்ளிவைக்கும் உரிமை, நிறுத்திவைக்கும் உரிமைகளை உபயோகித்து, கதோலிக்கருக்கு சலுகை அந்தரங்கத்தில் காட்டிய காரணமும் சேர்ந்து புரட்சி ஏற்பட்டதும் பழைய விபரங்களேயாகும். அதன்பிறகு மத விஷயம் பின்னணிக்குத் தள்ளப்பட்டு, இங்கிலந்தின் கட்சி பிரதிகட்சி அரசியல் விஷயங்களையும் கொள்கைகளையும் ஒட்டி, ஏற்பட நேர்ந்தது. ஆனால் அரசாளுபவர் மட்டும் கதோலிக்கராகவோ, கதோலிக்கரை மணக்கவோ கூடாது. கதோலிக்க வார்சுகளுக்குப் பட்டம் கிடையாது என்ற கண்டிப்பான திட்டம் ஏற்பட்டு, வற்புறுத்தப்பட்டு ஸ்தாபிக்கவும் பட்டது. அந்தத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்த போக்கில்தான் ஹானோவர் வம்சம் இங்கிலாந்தில்

1714-ல் ஸ்தாபிக்கப்பட்டது. (அந்த வம்சத்தின் சந்ததியே தற்போதைய தியாக வீரம்பொருந்திய மாஜீ எட்டாவது எட்வர்ட் சக்ரவர்த்தியாகிய விண்ட்ஸர் கோமக னவார்.)

பொது ஜனங்களினுடைய மனதில் இதுமுதல் அரசியல் விஷயங்களே இருந்தன. மதம் நிறம்பவும் பின்னணிக்குச் சென்று, மதத்தில் உள்ள வேற்றுமைக்காக ஒரு நிபுணரோ அல்லது அருமையான அரசியல் வாதியோ உண்மையான தேசசேவையில் ஈடுபட வொட்டாமல் செய்வது நியாயமில்லை. என்ற உணர்ச்சி கொஞ்சம்கொஞ்சமாகத் தோன்றி நாளடைவில் வலுப்பட்டு வேரூன்றவும் ஆகிவிட்டது. முக்கியமாக சோதனைச்சட்டம் வெகு மேதாவிகளின் குறுக்கே நின்றது. அந்த சோதனைச் சட்டத்தினால்தான் சிம்மாசனத்திலிருந்து விலக்கப்பட்ட இரண்டாவது ஜேம்ஸ், முதலில் கப்பல் படைத் தலைவன் ஸ்தானத்தை ராஜீனமாச் செய்த காரியம் நிகழ்ந்தது. ஆக, மூன்ருவது வில்லியம் ஆட்சியின் காலத்தில் இம்மாதிரியான தடையை நிவர்த்திக்கவென்றே ஒருமுறை அரசியல் வாதிகளால் கைக் கொள்ளப்பட்டது. அதாவது, திட்டமதத்திற்குப் புறம்பானவர்கள் உத்தியோகம் பெறும்போது மட்டும், திட்டமதக் கொள்கைகளின்படி பிரமாணம் செய்துவிட்டு, பிறகு அவரவர்கள் இஷ்டம்போல் மத அனுஷ்டானம் செய்து கொள்ளலாம் என்பதாகும். இதன் மூலமாய் பல நிபுணர்கள் அரசாங்கத்தில் நிர்வாகிகளாக இருந்து பல திட்டங்களைச் செய்து, அவர்களுடைய சேவை தேசத்திற்கு ஏற்படவும் நன்மையுண்டாகவும் சாதகமாயிருந்தது. ஆனால் வேண்டாதவர்களுக்குமட்டும் இந்த சோதனைச் சட்ட அமுல் பிரயோகமே தவிர, உண்மை மதப்பற்றுதலினால் அல்ல என்பது திண்ணம். வேண்டாதவர்கள் செல்வாக்கு அதிகம் பெறுவதைத் தடுக்கவே, ஆன் மகாராணி காலத்தில் "சந்தர்ப்பத்திற்கு மட்டும், மதப்பிரமாணம் செய்து கொள்ளும் முறைக்கு" எதிர்த்த ஒரு சட்டத்தைக் கொண்டுவர (The bill against occasional conformity) பகீரதப் பிரயத்தனம் எதிர்ப்புக் கட்சியினரால் செய்யப்பட்டது. இவ்வளவு தூரம் இந்த விஷயங்களை எழுத நேர்ந்ததின் காரணம் என்னவெனில் "மதம் போயிற்று! மதம் போயிற்று" என்று வெகு சில்லரை விஷயங்களுக்குக் கூச்சலிடும் வழக்கம் எந்த சமூகத்திலும் இருப்பது சகஜம். ஆனாலும் பெரிய தேசீய விஷயங்களில் முட்டுக்கட்டை போட்டு, தொண்டைகிழிய கத்துவது கூடாத காரியம் என்ற பாடம் ஆங்கிலேயரின் சரித்திரமே கூறுகிறதை நம் நாட்டினர் உணரவேண்டும் என்பதாகும். மேலும் இம்மாதிரி "மத ஆபத்து கட்டியம் கூறும்" பெரும் பான்மையினரும் உண்மை மதத்தின் அனுஷ்டானத்தில் நாட்டங் கொள்வதில்லை. அதே போக்கில் சென்ற ஆங்கிலசமூகம், மத குருமார்கள் உள்பட மத அனுஷ்டானத்தை வெகுவாக மறந்தேவிட்டனர் என்று கூறுவது மிகையாகாது. மதம் என்பது அலங்கார ஆபாரணர்த்த கேளிக்கை கூத்துப்போக்கில் வந்துவிட்டதில், "அக்ஞான ஆடுகளைப் பாதுகாக்கும் இடையன் போக்கு" மாறி, சுகானுபவத்திலும் சோம்பேறித் தனத்திலும் வந்து இறங்கிவிட்டது உண்மையாகி, மதாபிமானிகள் மனதை மருளச் செய்யவும் ஏற்பட்டது. இந்த மத மந்தத்தைப் போக்கி உண்மை மதப்பற்றுதலை உண்டாக்க உண்மை முயற்சி செய்து, மதத் தலைவர்களின் கோபத்திற்கும் நிந்தனைகளுக்கும், மதப் பிரஷ்டத்திற்கும், துன்பங்களுக்கும் ஆளாகியும் சளைக்காமல் தலை நிமிர்ந்து, உண்

மைத் தொண்டில் பற்றுள்ளவர்களாய் நடந்த இரு பெரியார்கள் நாம் இந்தத் தொடர்ச்சியின் தலையங்கத்தில் குறிப்பிட்டிருக்கும் வெஸ்லி சகோதரர்கள். அவர்களுடைய தளராமுயற்சியின் பலன்தான் "Wesley mission" (வெஸ்லி மிஷன் சங்கத்தார் இப்போதுள்ளவர்கள்) "தெய்வத்தா லாகா தெனினும் முயற்சிதன், மெய் வருந்தக் கூலிதரும்" என்பது பொய்யாமொழி.

ஜான் வெஸ்லி, சார்ல்ஸ் வெஸ்லி என்ற இருவரும் உடன்பிறந்த சகோதரர்கள். பிறப்பிலிருந்தே மத உணர்ச்சி இரத்தத்துடன் ஊறி வளர்ந்தவர்கள். சார்ட்டர் ஹௌஸ், ஆக்ஸ்போர்டு என்ற விடங்களிலிருக்கும் கலாசாலைகளில் கல்வி கற்றவர்கள். கலாசாலைக் கல்வி காலத்திலேயே, மதத் தலைவர்களும் சாதாரண மனிதர்களும் மத உணர்ச்சியே இல்லாம லிருந்ததைக் கண்டு மனம் புழுங்கியவர்கள் வெளி வேஷம்மட்டும் மத உணர்ச்சிக்கு அறிகுறியல்ல வென்பதையும், உண்மையும் அந்தரங்கசுத்தியும் உள்ள அனுஷ்டானமும் மிக்க அவசியம் என்பதைப்பற்றி விரிவுரைகள் நடத்தியதுடன், தாங்களும் அனுஷ்டான பூர்வ நடவடிக்கைகளை மேற் கொள்ளலானார்கள். அவர்களுக்கு அவர்களுடன் கூட இருந்தவர்களால் பரிகாசமாக (The methodists) "ஒழுங்குமுறைப் புலிகள்" என்று கேலிப் பெயர்களும் சூட்டப்பட்டனவாம்! (இம்மாதிரி சில சமயங்களில் "நீர் நேரே ஸ்வர்க்கம் ஏறும்போது உம் காலைப் பிடித்துக்கொண்டு நாங்களும் வந்துவிடுவோம்!" என்று ஒருவரையொருவர் ஏளனம் செய்வது சகஜம். இம்மாதிரி ஏற்படும் கேலிப் பெயர்கள் பெரும்பாலும் ஸ்திரமாகவே வருவதும், ஆதியில் கேலிப்பெயராக இருந்ததே பின்னுக்கு கௌரவப் பெயராகவே ஏற்பட்டுவிடுவது, இயற்கைப் பெயர் மறைந்தே போய்விடுவதும் பலர் அறிந்த விஷயமே உதாரணமாக கொஞ்சம் வைதிகமாக இருப்பவனை 'சாஸ்திரி' அல்லது 'தீக்ஷிதர்' என்று பரிகாசமாக அழைத்து, பின்னாலும் அவை அழைக்கப்படும்போது பேருக்கு தகுந்த சின்னங்களாகவே யில்லாமல் நேர்மாறாக இருப்பது காண்கிறோம்.) அதே!போன்று வெஸ்லி சகோதரர்களுக்கு மெதாடிஸ்ட்ஸ் என்ற பெயர் ஸ்திரமாயிற்று!! இந்த இருவருடன் ஜார்ஜ் விட்பீல்ட் என்பவரும் சேர்ந்து கொண்டார். இயேசுவின் உண்மைத் தத்துவங்களான நேர்மை, தூய்மை, தொண்டு, இரக்கம், அருள் முதலியவைகளைக் கிறிஸ்தவனெனச் சொல்லும் எவரும் அனுஷ்டிக்க வேண்டுமென்றால், மத குருமார்களுக்கும் அவைகள் அத்தியாவசியம் என்பதை வற்புறுத்துவானேன்! இவர்களும் மத குருமார்களாக தொழில் ஏற்று; உண்மை மத குருமார்கள் செய்யவேண்டிய உண்மைக் கடமைகளைப் பிரகடனம் செய்வதுடன் அனுஷ்டானத்திலும் தலை சிறந்து விளங்கினார்கள். அந்தத் துறையில் ஜான் வெஸ்லி வட அமெரிக்காவுக்கும் சென்று, அப்போது ஸ்தாபிக்கப்பட்ட ஜார்ஜியா குடியேற்ற நாட்டில் மாதா கோவில் ஸ்தாபனங்களை நடத்த ஆரம்பித்து இரண்டு வருஷங்கள் வரையில் இருந்தார். அதன்பிறகு 1729-ம் வருஷத்தில் இங்கிலந்துக்கு மீண்டும் வந்து ப்ரிஸ்டல் என்ற பட்டணத்தில் குடியாகி, தன் நோக்கப்படியான முறைகளில் மாதாகோவில் ஸ்தாபனங்களை நடத்துவது என ஆரம்பித்து பல பல இடங்களிலும் ஸ்தாபனங்களை ஏற்படுத்தினார். அதேமாதிரி அவருடைய சகோதரரும் ஜார்ஜ் விட்பீல்ட் (George Whitefield)டும் வேலை துவக்கினார்கள். மத உபதேசங்களையும் பிரசங்கங்களையும் மாதா கோவில்களிலும், மடாலயங்களிலும் மட்டுமே யிருந்து செய்வது என்ற போக்கை அறவே

யொழித்து, திறந்த வெளிகளிலும், மைதானங்களிலும், பலர் கூடும் இடங்களிலும் பொது ஸ்தாபனங்களிலும் நடத்தவேண்டும் என்று ஏற்படுத்தியதுடன் செய்யவும் செய்தார்கள். இதற்குமுன் மாதா கோவில்களின் விஷ்புறங்களிலேயே, ஏதோ வந்தவர்களுக்கு தீராத முறையில், வேண்டா வெறுப்பாகவே, பெரும்பாலான மத குருமார்கள் தங்கள் புனிதமான காரியங்களை உடம்பு அலுங்காமல் செய்து வந்தார்கள் என்பது சொல்லாமல் விளங்கக்கூடிய உண்மையாகிறது. அதன் பலன் மத குருமார்களிடமும் ஊக்கமோ உண்மையுழைப்போ, அந்தரங்க சுத்தியோ, ஜனங்களின் பாரமார்த்திக, ஆத்மார்த்த விஷயங்களில் செலுத்தப்படவில்லை. ஜனங்களிடமும் இவ்வித மனப்போக்கு குன்ற ஆரம்பித்து, க்ஷீணித்து நசிதமத விட்டதில், புண்ணிய பாவங்களுக்கு அஞ்சுதல், அக்ரம அநியாயங்களை வெறுத்தல் போன்ற எண்ணங்கள்கூட இல்லாமல் போய்விட்டது. இதற்கு முதலில் சொல்லப்பட்ட அரசியல் விஷயப் போக்கும் வெகுவாக உதவி செய்தது. (எந்த ஒரு கெடுதலும் சமூகத்தின் மேல்படியினரென்று சொல்லிக் கொள்ளும் மஹான்களிடமிருந்தே பாமர மக்களிடம் பரவுகிறது என்பதை ஆழ்ந்து கவனிப்பவர்கள் உணருவார்கள்.) மேலே உள்ள ஒரு சிலரிடம் அந்தக் கெடுதல் தோன்றும்போது அதன் முழுவேகம் சமூகத்தில் உணரப்படுவதில்லை. நாகரிகம் என்றதாகக் கொள்ளப்பட்டு, ஆட்டின் பின்னே ஆடு போவதற்கொப்பான போக்கில் பாமரரும் அதையே கைக்கொள்ள ஆரம்பிக்கும்போது சமூகமே தத்தளிக்க ஆரம்பித்து விடுகிறது. அத்தீமையைக் களைந்தெறிய பெரிய பெரிய மேதாவிகளும் மஹான்களும், பகீரதப் பிரயத்தனம் செய்தாலும் திணறித் திண்டாடி திக்குமுக்கலாடுவது பலரும் உணர்ந்ததேயாகும்.)

இந்தமாதிரி உழைத்த மெதாடிஸ்ட்ஸ், வெகு தீவிரமாகவும், விடாப்பிடியுடனும், உண்மையாகவும் ஊக்கத்துடனும் உழைத்து பல்லாயிரக் கணக்கான பாமர மக்களின் மனதிடை மத உணர்ச்சியை புனருத்தாரணம் செய்தார்கள். அதைப் பலப்படுத்த, கால் நடையாகவே கிராமங்களுக்குச் சென்றார்கள். அங்கங்கே ஒவ்வொரு கூட்டத்தைக் கூட்டி மத உபதேசங்களையும், மனிதனுக்கு சத்தியம், இரக்கம், அபிமானம், அன்பு, தேவையென்பதைப் பற்றியும் எடுத்துரைக்கலானார்கள். அந்தப் போக்கில் ஒருநாளில் பல கிராமங்களுக்குச் செல்லலானார்கள். இம்மாதிரி வாரம் ஒன்றுக்கு சராசரி பத்து கூட்டங்களுக்குமேல் கூட்டினார்கள். (போக்கு வரவு சாதனங்கள் தற்போதைப்போல அப்போது கிடையாது என்பதை வாசகர்கள் மனதில் வைக்க வேண்டும்.) இந்த பத்துக்கு மேற்பட்ட கூட்டங்களில் முப்பதினாயிரத்திற்கு மேற்பட்ட ஜனங்களைக் கூட்டிவைத்து பேசினார்கள். ஒரு வாரத்திற்குப் பத்துக்கு மேற்பட்ட கூட்டங்கள் என்றால் வருஷத்தில் ஐந்நூறுக்கு மேற்பட்ட கூட்டங்கள் நடந்திருக்க வேண்டுமென்பது புலனாகும். இங்கிலாந்தின் பல பாகங்களிலும் உள்ள மூலை முடுக்கு கிராமங்களுக்குக் கூட இந்த வெஸ்லி கோஷ்டியினர் போய்ச் சேர்ந்து தங்கள் கடமைகளை உண்மைத் துறவிகளாய் செலுத்தினர். செத்துக்கிடந்த மனித உணர்ச்சியும, மதக் கொள்கை நம்பிக்கையும், பாரமார்த்திக வாழ்க்கைப் போக்கும் புத்துயிர் பெற்றன.

இந்த இயக்கம், இயற்கையாகவே மத குருமார்களின் வெறுப்பிற்கு பாத்திரமாகியது விநோதமேயில்லை. தாங்கள் கடமைகளைச் சரியாகச்

செய்யவேயில்லை என்பதைச் சுட்டிக் காட்டுவது போலும், பாமர மக்களுக்கு தங்களிடமுள்ள பக்தியையும் சிரத்தையையும், பணிவையும் அன்பையும் குலைத்துவிட்டது போலும் நினைத்து விட்டார்கள். இவ்வளவுக்கும் மத குருமார்களையோ மடாதிபதிகளையோ எந்த விதத்திலும் அவதூறு வார்த்தைகளால் குறிக்கவேயில்லையாம்!! இருந்தாலும் தாங்கள் செய்யவேண்டிய காரியங்களை, இவர்கள் செய்துவிட்டது அதிகப்பிரஸங்கித்தனம் மத விரோதம் என்று பலவாறு குப்பைகளையும், வசை மொழிகளையும் சரமாரியாகப் பொழிந்து, அக்கூட்டத்தினருக்கு மாதா கோவில்களிலோ, அதன் பக்கங்களிலோ நின்று பேச அனுமதிக்கக் கூடாதென உத்தரவிட்டனர் பிரகஸ்பதிகள் என்பது எந்த சரித்திரமும் சொல்லும் ஒரு விநோத உண்மை!!!

"கதிரவ னொளியினை யெக்காற்றணைக்க வல்லதே?
வாயுவின் திறத்தை யெந்தவாள் சிதைக்கவல்லதே?
உண்மை வீரத்தொண்டனை யார் தடுக்கவல்லரோ?"

என்கிறார் ஒரு உயிர்ப்பாரதியார்! ஆகவே, இந்தச் சடுகுடு, தடபுடல் பூசல்களை யெல்லாம் அச் சகோதரர்கள் லட்சியமே செய்யவில்லை. மாதா கோவில்களில் இடமில்லை யென்றால், ஒதுங்கி தனியான ஸ்தாபனங்களை ஏற்படுத்திக்கொண்டு வேலையை முன்னையைக் காட்டிலும் பன்மடங்கு ஊக்கத்துடன் நடத்தி, இங்கிலந்து மாத்திரமேயன்றி உலகின் பல பாகங்களிலும் தங்கள் கொள்கைகளை பரப்பி பல பல கிளைகளை ஏற்படுத்தினார்கள். அதன் கிளைகளே நம் நாட்டிலும் உள்ள வெஸ்லி மிஷன் சங்க ஸ்தாபனங்களாகும்! (இதை ஆழ்ந்து கவனிப்பவர்களுக்கு, சமீப காலத்தில் நமது தேசத்திலும், வேதங்களின் அர்த்தங்களும், கீதையின் அர்த்தங்களும், ஸ்ருதி, ஸ்மிருதி அர்த்தங்களும், என்னென்ன என்பது சம்பந்தமாகவும், அதற்கு யார் சொல்லுவது அர்த்தமென்பது பற்றியும், யார் சொல்ல அருகதையானவர்கள் என்பதையும் குறித்த வாதப் பிரதிவாதங்களும், வசை மொழிகளும், அபாண்ட அபத்தங்களும், தூஷணைப் பிரசாரங்களும் நடந்த தத்துவம் தெளிவுற விளங்கும். இம்மாதிரி, "சிப்பை ஒளித்து கல்யாணத்தை நிறுத்தும் முயற்சியும், குன்றுகளை முட்டும் குருவிகள் முயற்சியும்" எவ்வளவு வரையில் பலனளிக்கும் என்பதும் உணர்ந்து கொள்ளக்கூடியதே.)

இதன் பிறகுதான் இங்கிலாந்திலும், பொதுவாக ஐரோப்பாவிலும், ஜீவகாருண்ய உணர்ச்சிக்கு வித்து ஊன்றுதலும், தாராள நோக்க பான்மை வளர்ச்சியும், உழைப்பின் பெருமையும் அடிமைகளை விடுதலை செய்ய முயற்சியும், பரஸ்பர சகிப்புத்தன்மை வளர்ச்சியும், கேவலம் பொருள் சேர்ப்பது மட்டும் உலக வாழ்க்கையல்ல என்ற நினைப்பு சிலரிடமாவது தோன்ற ஹேதுவும் ஏற்பட்டனவாம்! அந்த வெஸ்லி சகோதரர் போன்று நம் நாட்டிலும், புனிதமான நோக்கத்துடனும், உண்மை யுழைப்புடனும் முயலுபவருக்கு, எதுவும் தடையாகாது. முயற்சியின் பலன் கைகூடாமல் போகாது. வெற்றி ஏற்படுவது திண்ணம்! "எடுத்த காரியம் யாவினும் வெற்றி!!" வேண்டியது உணர்ச்சியும் ஊக்கமும், ஒழுங்கான திட்டமும், கட்டுப் பாட்டுணர்ச்சியுடன் கூடிய உழைப்புமேயாகும்.

அடுத்தது பார்லிமெண்ட் அமைப்பு திருத்த முறையைப் பற்றிய தொடர்ச்சியாகும்.



# புராணப் புதையல்கள்

(V. சங்கர ஐயர்.)

## தேவீ மஹாத்மியம்.



### பனிரெண்டாவது அத்தியாயம்.

**தேவி சொல்வது (1—29)**

இந்த தோத்திரங்களால் என்னைத் தினமும் எவனொருவன் சிரத்தையுடன் தோத்திரம் செய்வானோ அவனை ஸகல கஷ்டங்களிலிருந்தும் நான் காப்பாற்றுவேன். சந்தேகமில்லை. மதுகைடப வதம், மஹிஷாஸுரவதம், ஸும்ப நிஸும்பவதம் இவைகளை யாவர் கீர்த்தனம் செய்வார்களோ, அஷ்டமி நவமி, சதுர்த்தசி ஆகிய இந்த திதிகளில் என் சிரேஷ்டமான மஹாத்மியத்தை எவரொருவர் ஏகாக்கிர சித்தத்துடன் ஸ்துதிக்கின்றனரோ, அவர்களுக்கு ஒரு பாபமும் உண்டாகாது. அந்த பாபத்தால் ஏற்படுகின்ற ஆபத்துக்களும் உண்டாகா. தரித்திரம் பந்து வியோகம், இவைகள் உண்டாகாது. அவர்களுக்கு சத்துருக்களிடத்திலிருந்து அல்லது அரசனிடமிருந்து, அல்லது ஆயுதம், தீ, ஜலப்பிரவாஹம் இவைகளிலிருந்து உண்டாகின்ற பயம் ஒரு நாளும் உண்டாகாது. அதிக மங்களத்தைக் கொடுக்கின்றதும் விசேஷமானதுமான என்னுடைய இந்த மஹாத்மியத்தை தினமும் பக்தியுடன் மனதைச் செலுத்திப் படிக்கவோ, கேட்கவோ செய்ய வேண்டும். வைசூரி முதலான மஹாமாரியால் உண்டாகின்ற உபத்திரவங்களையும், மூன்று வித உத்பாதங்களையும் இல்லாமல் என் மஹாத்மியம் செய்யும். என்னுடைய எந்த க்ஷேத்திரத்தில் இந்த மஹாத்மியம் தினமும் தவறாமல் சரியாக படிக்கப் படுகிறதோ அந்த இடத்தை நான் ஒரு நாளும் உபேக்ஷிக்க மாட்டேன். அவ் விடத்தில் எப்பொழுதும் என்னுடைய ஸாந்நித்யம் இருக்கும். பலி பிரதானம் (பலி யென்றால் நிவேதனம் என்ற பொருளே அல்லாமல் ஆடு முதலியவைகளை வெட்டுகின்றதல்ல) பூஜை ஹோமம், மஹோத்ஸவம் இவைகள் செய்யும் பொழுது என்னுடைய இந்த சரித்திரத்தை பூராவும் சொல்லவும், கேட்கவும் செய்யவேண்டும். தெரிந்தோ தெரியாமலோ அப்படி செய்யப்படும் பலி, பூஜை, ஹோமம், இவைகளை நான் பிரீதியுடன் அங்கீகரிப்பேன். சாத் காலத்திலும், வர்ஷ காலத்திலும் எனக்கு மஹாபூஜை செய்கின்ற பொழுது என்னுடைய இந்த மஹாத்மியத்தை பக்தியுடன் கேட்டால் என்னுடைய பிரசாதத்தினால் எல்லா உபத்திரவங்களும் நீங்கும். தனதானிய விருத்தி யுண்டாகும். சந்தேக மில்லை.

என்னுடைய இந்த மஹாத்மியமும், சுபமான அவதாரங்களும், யுத்த பராக்கிரமங்களும், கேட்கிறவன் பயமே யறியாதவனாக இருப்பான். என்னுடைய மஹாத்மியம் கேட்கின்றவர்களுக்கு சத்துருக்கள் இருக்க மாட்டார்கள். நன்மையே வரும்; குடும்பம் விருத்தியடையும். எல்லா சாந்தி கர்மங்களிலும், கெட்ட சொப்பனம் காணும் பொழுதும், கஷ்டமான கிரஹ பீடை யிருக்கும் பொழுதும் இந்த என்னுடைய மஹாத்மியத்தைக் கேட்க வேண்டியது. அப்பொழுது உத்பாதங்களும், கோரமான கிரஹ பீடையும் இல்லாமல் ஆகும். மனுஷ்யர் பார்த்தது ஸ்வப்னம் ஸுஸ்வப்னமாக மாறும். பாலக் கிரஹங்களால் பீடிக்கப்பட்ட பாலர்களை இது சௌக்கிய மாக்கும். குடும்ப விவஹாரங்களைத் தீர்த்து சேர்த்து வைப்பதற்கு இது ஒரு விசேஷ சக்தியுடையதாகும். துஷ்டர்களுக்கு எல்லாம் சக்தியே இல்லாமல் செய்யும். இதை படித்தாலே ரக்ஷஸ்ஸுகள், பூதங்கள், பிசாசுகளுள் எல்லாம் விலகும். என்னுடைய இந்த மஹாத்மியம் பூராவும் என் ஸாந்நித்திய முடையதாகும். பசுக்கள், புஷ்பங்கள், அர்க்கியங்கள், தூபதீபங்கள், சந்தனம் முதலான வாசனைத் திரவியங்கள், பிராமண போஜனம், ஹோமங்கள், இரவும் பகலும் தர்சனம், பலவிதமான தானங்கள், இவைகளைக் கொண்டு ஒரு வருஷகாலம் என்னைப் பூஜித்தால் எவ்வாறு நான் திருப்தியடைவேனோ அதை ஒரு தடவை இந்த மஹாத்மியத்தை படிப்பதனாலும் கேட்பதனாலும் கிடைக்கும். கேட்டால் பாபங்கள் இல்லாமல் ஆகும். ஆரோக்கிய முண்டாகும். என் அவதாரங்களை கீர்த்தனம் செய்தால் பூதபாதை உண்டாகாது. நான் யுத்தங்களில் துஷ்ட அஸுரர்களைக் கொன்ற சரித்திரத்தைக் கேட்கின்றவர்களுக்கு சத்துரு பயமே உண்டாகாது. நீங்கள் செய்த ஸ்துதிகளும், பிரம்மரிஷிகள் செய்த ஸ்துதிகளும், பிரம்மா செய்த ஸ்துதிகளும், நல்ல கெதியைக் கொடுக்கும். காட்டிற்குள்ளோ, பெரிய தனி மார்க்கத்திலோ சத்துருக்களுடைய கையிலோ, வனத்தில் காட்டானை சிங்கம், புலி இவைகள் மத்தியிலோ, ராஜ கோபத்திலோ சிரச்சேத குற்றம் ஏற்பட்டிருக்கும் பொழுதோ, காராக்கிரகத்திலோ, புயற் காற்றிலகப்பட்ட கப்பலிலோ, யுத்தத்தில் அதிகரோமான ஆயுத மேற்று கஷ்டப்படும் பொழுதோ, கடினமான வேதனைகளிலோ இருக்கும்பொழுது என்னுடைய இந்த மஹாத்மியத்தை ஸ்மரணம், (பாராயணம் அல்லது கேட்டல்) செய்யும் மனிதன் மேற்கூறிய சகல சங்கடங்களும் தீர்ந்தவனாகி விடுகிறான். என் சரிதம் ஸ்மரிக்கின்றவனுக்கு என் பிரபாவத்தினால் விம ஹாதிகள், திருடர்கள், சத்துருக்கள் இவர்கள் தூரத்திலேயே இருந்து ஓடிப் போய் விடுவார்கள்.

மஹரிஷி சொல்வது (30-38)

இவ்வாறு சொல்லி விட்டு அந்த சண்டை விக்ரமமான சண்டிகா பகவதி, தேவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அவ் விடத்திலேயே அந்தர்த்தானமானாள். அவர்கள் எல்லா பேர்களும், தேவி சத்துருக்களைக் கொன்று விட்டதனால் பயலேசமின்றி முன்போல தங்கள் தங்கள் யக்ஞபாகங்களை அனுபவித்துக் கொண்டு அவர்களுடைய அதிகாரங்களை மறுபடியும் நடத்தினார்கள். மிகுந்த அஸுரர்களோ, அதி குரூரனும், அதுல்ய விக்ரமனும், மஹாவீரியவானும், ஜகத்துக்குத் துரோஹியுமாக இருந்த ஸும்பாஸுரனையும் நிஸும்பாஸுரனையும் தேவி யுத்தத்தில் கொன்றதனால் பாதாள லோகத்திற்கு ஓடிவிட்டார்கள். ராஜாவே! இப்படி அந்த பகவதியான தேவி,

கித்யையாலும் மறுபடியும் அவதாரம் செய்து உலகத்தைக் காப்பாற்றுகின்றாள். அவளே இவ்வுலகத்தை மோஹிக்கச் செய்கிறாள். அவளே இவ்வுலகத்தை ஸிருஷ்டிக்கிறாள். நாம் பிரார்த்தனை செய்து, அவள் கருணை புரிந்தால் ஞானமும் சம்பத்தும் நமக்கு உண்டாகும். ஹே ராஜாவே! பிரளய காலத்தில் மஹா மாரி ரூபத்தோடு இந்த பிரம்மாண்டம் பூராவும் வியாபிக்கப்படுகிறது. அவளே காலத்திற்கு தக்கபடி மஹாமாரி (பெரிய மழை)யாகிறாள். அஜயான (பிறவி யில்லாத) அவளே பிறகு சிருஷ்டி கர்த்தாவாகிறாள். அந்த ஸநாதனியானவளே பின் எல்லா பூதங்களையும் ரக்ஷிக்கவும் செய்கிறாள். அவளே நமது நல்ல காலங்களில் லக்ஷ்மியாக நம்முடைய வீடுகளைச் செழிக்கும்படி செய்கிறாள். கெட்ட காலத்தில் அவளே அலக்ஷ்மியாக எல்லா வற்றையும் நாசம் செய்கிறாள். அவளை ஸ்தோத்திரம் செய்து புஷ்பம், சந்தனம், தூபம் முதலானவைகளால் பூஜை செய்தால், அந்த தேவி, சந்ததி, சம்பத்து, தர்மபுத்தி, நற்கதி இவளைக் கொடுப்பாள்; என்று மார்க்கண்டேய புராணத்தில் தேவீ மஹாத்மியத்தில் (12) தேவீ சரித மஹாத்மியம் என்ற எண்பத் தொன்பதாம் அத்தியாயம்.

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

### மஹரிஷி சொல்வது (1-3)

ராஜாவே! இந்த உத்தமமான தேவீ மஹாத்மியத்தை நான் தங்களுக்கு சொன்னேன். இந்த லோகத்தை பரிபாலிக்கின்ற அந்த தேவியினுடைய பிரபாவம்—இப்படி யிருக்கிறது. விஷ்ணு பகவானுடைய மாயையான அந்த தேவிதான் ஞானத்தைக் கொடுக்கின்றாள். அவளே தங்களையும், இந்த வைச்யனையும், உங்களைப்போல மற்ற அறிவாளிகளையும் மோஹிக்கும்படிச் செய்கிறாள். மோஹிக்கும்படிச் செய்திருக்கிறாள். மோஹிக்கும்படிச் செய்வாள். மகாராஜாவே! தாங்கள் அந்த பரமேசுவரியை சரணம் அடையவும் அவளைத் தாங்கள் ஆராதனை செய்தால் மானுஷ போகங்களும், ஸ்வர்க்காபவர்க்கங்களும் கிடைக்கும்.

### மார்க்கண்டேயர் சொல்லுவது (4-9)

மஹாமுனே! இப்படி அவருடைய வார்த்தையைக் கேட்டு அந்த ஸுரத மஹாராஜா தீக்ஷ்ண விருதஞன அந்த மஹரிஷியை நமஸ்காரம் செய்து அதியான மமதையினாலும், ராஜ்யம் போனதினாலும் உடனேயே வைசியனோடுகூட தபஸ் செய்ய புறப்பட்டான். அவ்விருவரும் அம்பிகையை பிரத்தியக்ஷ மாக்குவதற்காக, நதியினுடைய மணலில் விருந்துகொண்டு உத்தமமான தேவீ ஸூக்தத்தை ஜபித்துக்கொண்டு தபஸ் செய்தார்கள். அவர்கள் அந்த மணலில் மண்ணினால் தேவியின் விக்கிரகம் செய்து புஷ்பம் தூபம், தர்ப்பணம் இவைகளால் பூஜை செய்தார்கள். ஆஹாரத்தைத் தள்ளி ஆத்மாவை அடக்கி தேவியை ஏகாக்கிர சித்தத்துடன் தியானிக்கின்ற அவர்கள், தங்களுடை தேஹரத்தத்தில் கனைத்து பலி கொடுத்தார்கள். இவ்வாறு மூன்று வருஷகாலம் ஆராதனை செய்ததனால், ஜகன் மாதாவான சண்டிகை மனோப்பிரசாத மடைந்து பிரத்தியக்ஷமாக வந்து இவ்வாறு சொன்னாள்.

**தேவி சொன்னது (10)**

*ஹே ராஜாவே! ஹே குலநந்தன! உங்களுக்கு எது இஷ்டமோ அதைக் கேட்கவும். திருப்தி யடைந்த நான் அதையெல்லாம் உங்களுக்குக் கொடுக்கின்றேன்.*

**மார்க்கண்டேயர் சொல்வது (11-12)**

*அப்பொழுது ராஜா தனக்கு மறு ஜன்மத்தில் ஸ்திரமான ராஜ்ய போகமும், இந்த இந்த ஜன்மத்தில் தன் சத்துருக்களைக் கொன்று தன்னுடைய ராஜ்யம் கிடைக்க வேண்டுமென்றும் கேட்டான். வைராக்யம் வந்த புத்தி சாலியான வைசியன் நான், என்னுடையது என்ற எண்ணங்களை இல்லாமல் செய்யக் கூடிய ஞானம் வேண்டுமென்றான்.*

**தேவி சொல்வது (13-15)**

*ராஜாவே! தான் சில நாட்களுக்குள் உமது ராஜ்யத்துக்கு அதிபதியாவீர். சத்துருக்களை யெல்லாம் கொன்று விடுவதனால் ஸ்திரமாகக் கிடைக்கும். அடுத்த ஜன்மத்தில் நீர் சூரிய பகவானிடமிருந்து பூமியில் பிறந்து ஸாவர்ணி என்ற மனுவாக ஆகக்கடவீர். வைசியோத்தம! நீ கேட்ட வரத்தையும் கொடுக்கின்றேன். உமக்கு ஸித்தியைக் கொடுக்கக் கூடின ஞானம் உண்டாகும்.*

**மார்க்கண்டேயர் சொல்வது (16-17)**

*இப்படி அவர்களுக்கு இஷ்டப்படிக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்து விட்டு அவர்களால் பக்தியுடன் ஸ்துதி செய்யப்பட்ட தேவி அந்த க்ஷணத்திலேயே அந்தர்த்தானமானாள். இப்படி தேவியிடமிருந்து வரம்பெற்று க்ஷத்திரிய சிரேஷ்டனான ஸுரதன் ஸூரிய னிடத்திலிருந்து ஆவிர்பவித்து ஸாவர்ணி என்ற மனுவாக வருவான் என்று மார்க்கண்டேய புராணத்தில் ஸாவர்ஸூ மந்வந்தரத்தில் தேவீ மஹாத்மியத்தில் (13) ஸுரத வைசிய வர லாபம் என்ற தொண்ணூறுவது அத்தியாயம்.*

தேவி மஹாத்மியம் முற்றிற்று.



# அக்பரின் அமுத மொழிகள்

(தென்னாப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை)

1. துன்மார்க்கத்துக்குச் சோம்பலே காரணம். நன்மையை நாடு கின்றவன் ஒரு தொழிலைக் கற்று அதில் பிரவர்த்திக்கவேண்டும்.

* * * *

2. லௌகிக சிந்தை யுள்ளவர்கள், சோம்பலுக்கு இடங்கொடாமலும், அக்கிரமமான விஷயங்களில் விருப்பஞ் செலுத்தாமலும், ஏதாவது ஒரு தொழிலில் முயற்சி செய்து கொண்டிருப்பதே தகுதி.

* * * *

3. உலக வாழ்க்கைக்கு அவசியமான கல்விப்பொருளையும், செல்வப் பொருளையும் தேடுவதில், ஒவ்வொரு நாளையும், வாழ்நாளின் கடைசிநாளாகவே பாவித்து, இன்றைக்குச் செய்யத்தக்கதை நாளைக்குச் செய்யலாமென் றெண்ணி காலதாமதஞ் செய்தல் கூடாது.

* * * *

4. தேவ நியமனத்தை நிறைவேற்ற முயல்வதில் அப்போதைக்கப் போது தேகபலத்தைப் புதுக்கிக் கொள்வதற்கு ஊணும், உறக்கமும், சாதனங்களே யாயினும், அறிவிலார் சிலர் அவைகளை ஸாத்யமாகவே கருதுகின்றனர்.

* * * *

5. நித்திரையில் சரீரசௌக்கியம் உண்டாவது உண்மையே ஆயினும், மனுஷஜென்மம் பெறுப் பேறுகையால் மனிதர் நெடுநேரம் நித்திரையில், காலத்தைப் போக்காமல் விழித்திருந்து காரியங்களைக் கவனிக்க வேண்டும்.

* * * *

6. நல்வினையின் மேன்மையைக் கருதியே நல்வினையைச் செய்ய வேண்டும். அதனாலுண்டாகும் லாபநஷ்டங்களைக் கருதலாகாது.

* * * *

7. ஒவ்வொருவனுக்கும் சாமர்த்தியம் வேறுபடுவதே மனிதஜாதி தொடர்ந்து வருவதற்குக் காரணம்.

* * * *

8. மனத்தடுமாற்றம் உற்றவருக்கு நல்லோர் கூட்டுறவு போன்ற பரிகாரம் வேறில்லை.

9. சிநேகருடைய சேர்க்கையால் மனிதர் சிநேகருடைய இயல்பைப் பெறுவர். அவரவர்க்கு உண்டாகும் நன்மை தீமைகளில் அநேகத்துக்கு அதுவே காரணம்.

* * * *

10. சரீர சம்பந்தமான வியாதிகள் பிரத்தியட்சமாக இருந்தும் எத்தனையோ வைத்தியருடைய ஔஷதங்கள் பலிக்காமற் போகின்றன. பிரத்தியட்சமாகாத ஆத்மவியாதிகளுக்கு எந்த ஔஷதம் உபயோகமாகும்?

* * * *

11. பிரகிருதியில் சூன்யபிரதேசம் இல்லை என்பதை விவரிக்க நிமித்தமில்லை. கடவுள் சர்வாந்தர்யாமி.

* * * *

12. பகுத்தறிவாகிய பூஷணமே மனிதனுடைய உயர்வுக்குக் காரணம். ஆகையால் அது கற்பிக்கின்ற வழியிலிருந்து விலகாமையே உத்தமம்.

* * * *

13. ஞானமானது குணபூரணத்தின் சிகரமேயாயினும், கார்ய மாத்திரத்தில் அனுஷ்டிக்காவிட்டால் அதைப்பெற்றும் பயனில்லை.

* * * *

14. மனிதருடைய குணாகுணங்களை நிதானித்தறிவது மிகவும் கஷ்டமான வித்தை. அது எல்லாருக்கும் சாத்தியமாவதில்லை.

* * * *

15. பொய் புனை சுருட்டைக் கண்டு பிடிப்பது மிகவும் கஷ்டம். பேசுவோனுடைய வார்த்தைகளை நன்றாய் நிதானிப்பதே அதைக் கண்டு பிடிப்பதற்கான உபாயம்.

* * * *

16. நியாய தீர்ப்புத் தவறாக இருப்பதற்கு மூன்று காரணங்களுண்டு. அவை விவேகம் போதாமை.—உட்பகையுள்ள சிநேகர் கூட்டுறவு—தங்கள் சொந்த நன்மையை நாடும் சிநேகருடைய இரண்டகமாம்.

* * * *

17. குடிகள் செய்தலான் கடமைகளை அரசன்தான் செய்யும்படி மேற்கொள்ளலாகாது. மற்றவர்களுடைய குற்றங்களைப் பரிகரிப்பது அவன் கடமை. அவனுடைய தவறுகளைத் திருத்துவார் யார்?

* * * *

18. அவனவன் பகுத்தறிவே அவனவனுக்கு ஆசிரியன்; அது இயற்கையில் விளக்கமுள்ளதாயின் அதுவே அவனுக்கு வழிகாட்டும்.

---

# பண்டைத் தமிழ்ப்பாவலரும் பாவையர் வருணனையும்

(K. V. சிவசுப்பிரமணியன், B. A.)

குறிப்பிட்ட மக்கட்டொகுதியினர் உலகில் சீர்பெற்றிலங்க வேண்டுமாயின் அதற்குப் பெண்டிரே முதற்றுணைவராய் இருக்கின்றனர். ஒருநாட்டிலுள்ள பெண்மக்களே தாம் பெற்றெடுக்கும் ஆடவர்களை நன்னெறியிலுய்த்து வீரர்களாக்கும் அரும்பெறல் ஆற்றல் வாய்ந்தவர். ஆகையால் ஒரு நாட்டின் ஜனசமூகம் முன்னேற்றமடைய வேண்டுமாயின் அங்கே மாதர் சமூகம் சிறப்புற்று உன்னத நிலையிலிருப்பது அவசியம். ஆகையால் யாதனுமொரு கவிஞர் எடுத்துக்கொண்ட நாட்டின் வருணனையில் அந்நாட்டு மகளிரின் மேம்பாட்டைக் கூறுமலிரார். எனவே அங்ஙனம் சிறந்து விளங்கும் பெண்டிர் பெற்றெடுத்த ஆடவர்கள் பல்வேறு துறைகளிலும் பாங்குபெற விளங்குபவர் என்பது கூறுமலே அமைந்த தொன்றாம். அது பற்றியே தமிழ்நூல் எல்லாவற்றுள்ளும் பெண்டிர் பெருமை பெருகியும் ஆடவர் பெருமை அருகியும் காணப்படுகிறது. இனி, பாவலர் பலரின் பல திறப்பட்ட வருணனைப்பாக்கள் சிலவற்றைக் கவனிப்போம்.

காதல் வயத்தனுகி மாறுபட்ட சிந்தையுடைய நளன் பூம்பொழிலில் உலாப்போந்தனுன்று காணுவனவெல்லாம் காதற்காட்சியாகவே திகழ்ந்தன என்பதை அதி வீரராம பாண்டியன்,

"குளிர்நறுஞ் சாந்தநாறுங் கூவிளங்கனி முள்ளேறுண்டு
ஒளிர்வ கணிகைமாதர் வரிமுலைக் குவமைசான்ற
தலையவிழ் பாடலத்தின் கவரிணர் சம்பராரி
யுளவா ரொருவர் மேலும் உடற்றினப் பகழிபோன்ற."

என்ற பாடலால் விளக்குகிறார். முள்ளினுலே கிழிக்கப்பட்டு விளங்குகின்ற குளிர்ச்சி பொருந்திய நல்ல சந்தனம்போல மணக்கின்ற வில்வப்பழங்களானவை, பரத்தையருடைய நகக்குறிகளையுடைய முலைகளோ டொத்தன. பாதிரிமரத்தின் பூங்கொத்துகள் மன்மதனானவன் வருந்தும்படி நாயகநாயகியர்மேல் ஏவுதற்கு வைத்திருக்கும் அம்புறாத்தூணி போன்றது என்பதாம். இனி, தூதுசென்ற அன்னம் தமயந்தியின் வனப்பை நளனுக்கு ஒவ்வொரு அவயவமாக எடுத்துக் கூறுவனவாக அமைந்திருக்கும் செய்யுள்கள் பதினைந்தாகும். அவற்றுள் சாமுத்திரிகா லக்ஷண நூலுள் கூறப்படும் இலக்கணங்கள் யாவும் கூறப்படுகின்றன.

இனி இறைவன் அறுபத்து மூன்று திருவிளையாடல்களைச் செய்தருளிய இடமாகிய பாண்டிநாட்டைப் புனைந்துரைக்கப் புகுந்த பரஞ்சோதியார்,

பழிபடு நறவந்தன்னைக் கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடுமாற வேர்வை முகத்தெழ முறுவல்தோன்ற
விழிசிவந் துழலக்கூந்தல் மென்றுகில் சோரவுள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் கலந்தவ ரொத்த தன்றே.

என்று கடைசியர் செய்கையைக் கவினுறக் கூறினர். இதில் கள்ளுண்போர் ஐம்புலனின் ஆட்சியை இழப்பர் என்பது விளக்கப்பட்டது. கள் மிகக் கொடியது என்பதை "பழிபடு நறவு" என்றார். அத்தகைய கள்ளைப் பள்ளர் குலப்பெண்டிர் குடித்து வாயினின்றும் மாறுபட்ட சொற்களெழும்படியும், முகத்தில் வேர்வை வெள்ளமோட புன்சிரிப்புகொண்டு கண்கள் சிவந்து மருண்ட காட்சியை யளிக்க, கூந்தலும், இடையிலுள்ள ஆடையும் நழுவி அவிழ்ந்து வீழ்தலையும் உணராது மனதிலே அளப்பரும் ஆனந்தங்கொண்டு காமவின்பம் பெற்றவர்போல் பெரிதும் மகிழ்ந்து பாடுவர் என்றார். இத்தகைய காட்சியை இன்றுங்கூட நாம் சாலைகளில் காண்கிறோம். கள்ளுண்டோன் அச்சம், நாணம், வலிமை, தன்னை ஆட்சிபுரியும் சக்தி முதலியவற்றை இழப்பான் என வள்ளுவர் கூறியதை, பரஞ்சோதியார் உதாரணங்கொண்டு விளக்கி யிருக்கிறார். மற்றும் மதுரையம்பதியில் வேளாளர் வீதி, அந்தணர் வீதி, பரத்தையர் வீதிமுதலியவற்றைப் பாங்கு பெறப் புனைந்துரைத்தார். அது நம் மனக்கண்முன் பற்பல காட்சிகளை அளிக்கின்றன.

இனிக் கம்பர்பெருமான் கற்பனை கணக்கி லடங்காதது. நாட்டுப்படலத்தில் கடைசியரது காருண்யத்தை "கண்ணெனக் குவளையைக் கட்ட லோம்பினர்" என்றார். அந்நாட்டுக் கழனிகளில் வேலைசெய்யும் கடைசியரது கண்களைப்போலவே செங்கழுநீர் மலர்கள் நீலநிறம் பொருந்தி யிருக்கும் காரணத்தால் அவர்கள் இரக்கமுற்றுப் பிடுங்காது விடுத்தனர் எனக் கூறிய அடியால் அந்நாட்டின் இயற்கைவனப்பும் மகளிரது கருணையும் உணர்த்தப்பட்டது.

காலஞ்சென்ற கவி சுப்ரமணிய பாரதியாரும் அரிவையரது இலக்கணத்தைக் கற்பனைமூலம் மக்களுக்குணர்த்துவதில் ஏனைய கவிஞர்களுக்கு ஒரு சிறிதும் தாழ்ந்தவரல்லர்.

"சுட்டும் விழிச்சுடர்தான்—கண்ணம்மா
சூரிய சந்திரரோ!
வட்டக் கரியவிழி—கண்ணம்மா
வானக்கருமை கொல்லோ!
சோலை மலரொளியோ—உனது
சுந்தரப் புன்னகைதான்!
நீலக்கட லலையோ—உனது
நெஞ்சி லலைகளடி!
கோலக் குயிலோசை—உனது

குரலி னினிமையடி!
வாலைக் குமரியடி—உன்னை
மருவக்காதல் கொண்டேன்!
ஆத்திரங் கொண்டவர்க்கே—கண்ணம்மா
சாத்திர முண்டோடீ!
மூத்தவர் சம்மதியில்—வதுவை
முறைகள் பின்பு செய்வோம்
காத்திருப் பேனோடீ—இதுபார்
கன்னத்து முத்தமொன்று.”

என்பது போன்ற பாடல்களில் ஒத்த அன்பினராய தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டு காதல்கொண்டு களவொழுக்கம் நிகழ்ந்தபின்னர், கற்பொழுக்கம் நிகழ்தலாகிய பண்டைக்காலத் தமிழர் மணமுறைப்பாங்கினை விளக்கியுள்ளார் பாரதியார்.

இங்ஙனமாக பற்பலக் கவிஞரின் சொற்பெருக்கினைக் கற்குந்தோறும் கருத்தில் கவின்பெறு காட்சி யளிக்கின்றது. தற்கால நாகரிகத்தில் ஆங்கிலக்கல்வியின் பயனும் தாய்மொழிப்பற்றற்ற ஒரு தமிழன் இப் புலவர்களின் இயற்கை வருணனைகளையும், கற்பனை நலத்தினையும் சோம்பலின்றிக் கற்பானாயின் அம் மொழிக்கண்ணே அவன் கொண்டுள்ள வெறுப்பு எரிமுன்னர் வைத்தூறுபோற் கெடுமென்பது திண்ணம்.

# இயற்கை சுகவாழ்வு

(டாக்டர் எல். சேஷாத்திரிநாதன், எம்.பி., பி.எஸ்.)

பொது ஆரோக்கியத்தின் விஷயமாக தெளிவான நோக்கங்களை அடையும் பொருட்டு, நமக்கு நன்ருய்த் தெரிந்ததும், ஆனல், அடிக்கடி கவனியாமல் விட்டு விட்டதுமான இரண்டு விஷயங்களை நாம் அறியவேண்டிய தவசியம். முதலாவது, மனிதனுடைய புத்தியும், நடத்தையும் எவ்வளவு அபிவிருத்தியடைந்த போதிலும், அவன் முக்கியமாய் சில சுற்றுப் புறங்களுக்கும் நிலைமைகளுக்கும் ஆரம்பத்தில் ஒருமைப்பட்ட ஒரு ஜெந்து ஆவான். மற்றொன்று, நாகரீகத்தின் பலனுக, அந்த சுற்றுப் புறங்களும் நிலைமைகளும் சில மாறுதல்கள் அடைவதற்கு ஆவசியகம் ஏற்பட்டிருக்கிறது. ஆனதுபற்றி, நாம் யோசிக்க வேண்டிய கேள்வி யாதெனில் அவன் "ஜெந்துக்குணங்கள்" அதாவது, அவனுடைய தேகத்தொழில் சம்பந்தமான நடத்தை சீரழிந்து போகாமல் இருக்கும்படி எவ்வாறு இந்த மாறுதல்களைச் செய்யலாம்?

ஆதியில், மனிதன் அரைவாசி அம்மணமான ஜெந்து. அவன் வேட்டையாடியும் நிலத்தை உழுதும் தன் ஆகாரத்தைத் தேடிக் கொண்டிருந்தான். ஆரம்பத்தில் இந் நிலைமைகளுக்கு அவன் ஒற்றுமைப்பட்டிருந்தான். காலம் செல்லச் செல்ல, அவனுக்கு நாகரீகம் அதிகமாயிற்று. அதாவது, அதிகமாக உடைகளைத் தரிக்கலானன்; வீடுகளிலும் கூட்டம் கூட்டமாகவும் வசிக்கலானன்; தன்னுடைய ஆகாரத்தை வியர்வை வடிய உழைத்து சம்பாதிப்பதை விட்டு, தன் மூளையை உபயோகித்து அதன் மூலமாய்ச் சம்பாதிக்க ஆரம்பித்தான். அவன் வாழ்வு இவ்வாறு மாறுதலடையவே, அதற்குத் தக்கபடி, அவன் பழக்க வழக்கங்களும் மாறுதலடைந்தன.

வாஸ்தவத்தில் சில மாறுதல்கள் உண்டாயிருக்கின்றன. ஆனல், அவை ஆரோக்கியத்திற்கு அனுகுணமான மாறுதல்கள் அன்று. அவற்றால் ஏதோ சுகம் உண்டென்றும், அவை நாஜூக்கானவை என்றும் ஒரு தப்பபிப்பிராயத்தால் அவை ஏற்பட்டவை. மனிதன் உழைப்பதற்கென்றே சிருஷ்டிக்கப்பட்ட ஒரு ஜெந்து. தேகாரோக்கியமானது தேகத்திலுள்ள ஒவ்வொரு ஸெல்லும் சரிவரத் தன் தொழிலைச் செய்வதைப் பொருந்தி நிற்கும். ஒரு பாகத்திற்கு இது எவ்வாறு நிஜமோ, அவ்வாறே முழுதிற்கும் நிஜமாகும். வேலை செய்யாத மனிதன் ஒரு போதும் ஆரோக்கிய முள்ளவனுக இருக்க மாட்டான். குறைந்தது வெகு காலம் மட்டும் ஆரோக்கியமாக இருக்க முடியாது. சாதாரண மனிதனுக்கு தனது சக்தியை வெளிச் செலுத்த சில தொழில்கள் வேண்டும். அவை இராவிடில், கெட்ட வழிகளில் அதைச் செலுத்தும்படி நேரிடும். குடிகாரர்கள், சதா தூக்கித்துக்கொண்டிருப்பவர்கள், உன்மத்தம் பிடித்தவர்கள் ஆகிய இவர்கள் யாதொரு வேலையும் செய்யாமலிருக்கும் ஜனங்கள்.

ஆனதுபற்றி, ஆரோக்கியமாக விருப்பதற்கு மனிதன் உழைக்க வேண்டும். ஒருவனுக்குச் சரியான வரும்படி கிடைக்கா விட்டால், அவனை வேலை செய்யும்படி கட்டாயப் படுத்துவது சுலபமான காரியமல்ல. தேகத்திற்கும் மனதிற்கும் போதுமான தொழில் வேண்டும். இரண்டையும் புத்திசாலித் தனமாய்க் கலந்து செய்தால், தேகம், மனம் இரண்டும் ஆரோக்கியமாக இருக்கும். ஒருவனுடைய தொழிலிலோ, உத்தியோகத்திலோ சாவகாஸம் அதிகமாக இருக்கும் பக்ஷத்தில், அவன் தனக்குப் பிரியமான ஒரு வேலையைத் தெரிந்து கொண்டு, அதை ஓய்வு நேரத்தில் செய்யும் பக்ஷத்தில் அது தன் தேகத்திற்கு ஒரு வியாயாமமாக இருப்பது மன்றி, தன் மனதிற்கும் ஓய்வு கொடுக்கும்.

இயற்கையில் மனிதன் ஒரு அம்மணமான ஜெந்துவா? என்பது ஒரு விவாதமான விஷயம். உடையை நாம் இப்போது தரிக்கிறோம். அது காயமாய் நம்மிடம் நின்று விட்டது. மிகை படைச் சொல்லல் என்னும் குற்றத்திற்குப் பயப்படாமல் நாம் எல்லோரும் இப்போது அதிக உடை தரிக்கிறோம் என்று ஒருவன் உறுதியாய்ச் சொல்லலாம். இந்த உடையினாலே தர்மத்தின் தொழில்கள் எவ்வாறு பாதிக்கப்படுகின்றன என்பதை இப்போது யோசிப்போம். சர்மமானது குளிருக்குச் சுருங்குகிறதென்றும், வெப்பத்திற்கு விரிகிறதென்றும் யாவருக்கும் தெரிந்த விஷயம். இந்த சக்தியானது மற்ற ஜீவிய சக்திகளைப் போலவே, நிலைத்திருப்பதற்குச் சரியான வியாயாமத்தைப் பொருந்தி நிற்கிறது. மற்றவைகளைப் போல், இங்கும் அதைச் சரியாய் உபயோகிப்பதனால் தொழில் அதிகமாகிறது. அது நோய்ப்பட்டால், அதன் தொழில் போய்விடுகிறது. தப்பு வழியில் உபயோகித்தால் வியாதி உண்டாகிறது. ஆனதுபற்றி, சர்மத்தின் சரியான தொழிலுக்கு இடைஞ்சல் இல்லாமலும், அது சரியான வியாயாமம் செய்வதற்குப் போதுமான வசதிகள் கொடுக்கும் பொருட்டும் நாம் உடுக்கும் உடையை ஒழுங்குபடுத்த வேண்டுமென்று நமக்குத் தெரிகிறது.

ஆரோக்கியமுள்ள மனிதனுக்குப் போதுமான உடை யாதெனில், அது உஷ்ணக்கிரக மாறுதல்களினின்றும் தேகத்தைப் பாதுகாப்பதற்குப் போதுமானதா யிருப்பது மன்றி, இரத்த ஓட்டம் சரிசமானமாக இருக்கும்படியாயும் செய்வதேயாம். அதாவது, ஒரு ஆரோக்கியமுள்ள மனிதனுக்கு உஷ்ணக்கிரகத்தின் மாறுதல்களினின்றும் ஒருவனைக் காப்பாற்றுவதற்கு எவ்வளவு வேண்டுமோ, அவ்வளவே அவனுக்குப் போதுமான உடையாகும். வெப்பம் மிகுதியாயுள்ள இந் நாட்டில் நாம் எல்லோரும் அளவுக்கு மிஞ்சி உடை தரிக்கிறோம். அதிக உடை தரிக்கக் கூடாது என்பதைப் பற்றிய வாதங்கள் குழந்தைகள் விஷயத்தில் மிகவும் முக்கியமானவை. குழந்தைகளுக்கு அதிக உடை போட்டால், அது அவைகள் ஆரோக்கியமாக வளருவதைத் தடுக்கும். ஏனெனில், அது சூரிய கிரணங்களை மேலே படவொட்டாமல் தடுக்கின்றது. இந்த விதியை நாம் அனுசரிக்கும் பக்ஷத்தில் இப்போது குழந்தைகளுக்குக் காணும் கணநோய் என்னும் கொடிய வியாதி அவ்வளவு அதிகமாக இராது. உடை எவ்வளவு தேவை என்பதைச் சொன்னோம். இப்போது எம்மாதிரியான உடையைத் தரிக்கவேண்டுமென்பதை நாம் சொல்லுவோம். இது அவரவர்களுடைய பிரியத்தையும் பொருளாதாரத்தையும் பொருந்தியது. தென் இந்தியாவில் சீதோஷ்ணஸ்திதி சரிசமானமாயிருப்பது பற்றி, நமக்குக்

கம்பளம் தேவையில்லை. நமக்குப் பட்டும் பருத்தியும் தான் ஏற்றவை. அவை சர்மத்திற்குத் தாராளமாய் காற்றோட்டத்தை வரவிடுகின்றன. இடுப்பு, மார்பு கழுத்து இவ் விடங்களில் உடையை இறுக்கிக் கட்டுவதைத் தவிர்க்க வேண்டும். அப்படி செய்வதால், ஜீவாதாரமான உறுப்புக்களை நாம் இறுக்கி விடுகிறோம்.

இப்போது, ஸ்நானம் செய்யவேண்டிய காரியத்தைக் குறித்து கொஞ்சம் சொல்வோம். இது அவசியம் என்பதை யாவரும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். தினம் ஒருதரமாவது ஸ்நானம் செய்வது நலம். தென் இந்தியாவின் சீதோஷ்ண ஸ்திதிக்கு, ஆரோக்கியமாய் வாழ்வதற்கு குளிர்ந்த நீர் ஸ்நானம் நல்லது; சிக்கனமானது.

ஆரோக்கிய வாழ்விற்கு, சுத்தமான காற்றும் அதுவும் நிரம்ப இருப்பதும் அவசியம். கெட்ட அசுத்தமான காற்றை சுவாஸிப்பதால் நேரிடும் வியாதிகள் அநேகம். நாம் எவ்வளவுக்கெவ்வளவு சுத்தமான காற்றை சுவாஸிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நம்மைச் சுற்றிலுமுள்ள நோயைக் கொண்டு செல்லும் கிருமிகள் நம்மைத் தாக்குவதை எதிர்ப்பதற்கு நமக்குச் சக்தி இருக்கும். குழந்தை பருவ முதற்கொண்டே தாழ்வாரங்களிலாவது அல்லது நன்றாய் திறந்து வைக்கப்பட்ட ஜன்னல்களும் காற்றுவாரிகளுமுள்ள அறைகளிலாவது அவைகளைப் படுத்துறங்கும்படி செய்யவேண்டும். ஜன்னல்களைத் திறந்துவைப்பதினால் ஜலதோஷமுண்டாகும் என்னும் ஒரு முட்டாள்தனமான கொள்கையை விட்டொழிக்கவேண்டும். மற்றப்படி புத்திசாலிகளாயும் நியாயத்திற்குக் கட்டுப்பட்டவர்களாயுமுள்ள ஜனங்கள் கூட, திறந்து வைக்கப்பட்ட ஜன்னல்களின் அடியில் உட்காருவது அபாயகரமானதென்று நினைக்கிறார்கள். ஏனெனில், அதனால் அசுகம் இல்லாவிட்டாலும், அபாயத்தை விளைவிக்கும்; ஜலதோஷம் உண்டாகும். இந்தக் கொள்கைக்கு யாதொரு நியாயமும் காணோம். இப்போது சுகமான காற்றோட்டத்திற்கும், விஷத்தன்மையுள்ள தங்கியிருக்கும் காற்றுக்கும் உள்ள வித்தியாஸத்தைக் கண்டறியவேண்டும். உதாரணமாக, க்ஷயரோகத்திற்கும், இன்னும் மற்ற நுரையீரல் வியாதிகளுக்கும் இப்போது செய்யும் வெளிக்காற்றுச் சிகிச்சையை எடுத்துக்கொள்வோம். அனுபோகத்தில் காற்றுவாடைகள் கெடுதலற்றவை என்று இப்போது நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த வெளிக்காற்றுச் சிகிச்சையின் வெற்றியே, குளிர்காற்றுக்கொள்கை பிசகானதென்று நிரூபிக்கிறது. இந்தக் குளிர்காற்றுக் கொள்கையில் ஏதாகிலும் உண்மையிருக்கும்பக்ஷத்தில், முன்னமே மெலிந்துபோயுள்ள இந்த க்ஷயரோகிகள், வெளிக்காற்றில் விட்டவுடனே எலிகள்போல் இறந்து கிடக்கவேண்டும். அவர்கள் பிழைத்திருப்பதுமன்றி, அவர்களுடைய பலமும் எடையும் அதிகரித்து நோயும் தடைப்பட்டு நிற்கிறது. ஆனதுபற்றி, திறந்த கதவுகள், ஜன்னல்கள், திறந்தவெளிகள் இவற்றின் மூலமாய் பகவானால் நமக்குக் கிடைத்த நல்ல காற்றை நாம் உபயோகிப்போமாக.

சூரியவெளிச்சத்தின் குணத்தையும் ஆவசியகத்தையும் குறித்து மேலே சொல்லியிருக்கிறோம். நமது தேசத்தில் போதுமான சூரியவெளிச்சம் இருக்கிறது. அதை நமது அனுகூலத்திற்காக உபயோகிக்கிறோமா என்பது கேள்வி? நாம் இருட்டான, காற்றோட்டமில்லாத அறைகளில் வசிக்கிறோம். அதுவும் போதாமல் திறந்துவைக்கப்பட்ட சர்மத்தின்மேல் சூரியவெளிச்சம்

பட்டால் எவ்வளவு அனுகூலம் என்பதைத் தெரிந்துகொள்ளாமல் அதிகமாக உடைதரித்துக் கொள்கிறோம்.

எந்த ஜெந்துவிற்கும் பசி என்பது ஆரம்பத்திலேயே உண்டான ஒரு உணர்ச்சி. இது விஷயத்தில் மனிதனுக்கும் ஒரு கிருமிக்கும் வித்தியாஸம் என்பதே கிடையாது. இதனால் நாம் ஆகார விஷயத்தைக்குறித்து யோசிக்க நேரிடுகிறது. தேகத்திலுள்ள ஸெல்லுகள் தேய்ந்துபோனால் அதை வலுப் படுத்தவும் வளர்ச்சியை விருத்தி பண்ணவும் நானாவித தொத்துவியாதிகளி லிருந்தும் தேகத்தைப் பாதுகாக்கவும் நாம் ஆகாரம் எடுத்துக்கொள்கிறோம். தகாத ஆகாரத்தை உண்டால், நமது சக்தி குறைந்துபோய், வியாதிக்கு இரை யாகும்படி நேரிடும். இந்த வியாஸத்தில் சரியானதும் சரிசமானமானது மான ஆகாரம் எது என்பதை விவரித்துச்சொல்ல முடியாது. ஆனால் நமது தேசம் விருத்தியடைய வேண்டுமானாலும், நமக்குப் பின்வரும் சந்ததியார்கள் நம்மைக்காட்டிலும் பலசாலிகளாயிருக்க வேண்டுமானாலும் ஆகாரச் சீர்திருத் தம் வேண்டும். நமது ஆகாரத்தில் முக்கியமான குறை ஜீவஸத்துப் பொருள்களே. இவை ஒத்தாசையான ஆகாரப்பதார்த்தங்கள். இவைகள் தேகவளர்ச்சிக்கும், தொத்துவியாதிகள் அணுகாமல் இருப்பதற்கும் உதவியா யிருக்கின்றன. முற்காலத்தில் மனிதன் சமைக்காத இயற்கைப்பொருள் களையே உண்டு வாழ்ந்துவந்தான். ஆனால் அபிவிருத்தி ஆக ஆக, சமைக் கக் கற்றுக்கொண்டான். சமைப்பது அவசியம் என்பதை நாம் ஒத்துக் கொள்வோம். சமையல் ஒரு வித்தை. அதை நாம் கற்கக் கற்க அது நம்மையே முழுகடித்துவிட்டது. அது இப்போது நாம் சொல்கிறபடி கேட் கும் ஊழியக்காரனன்று. அது நம்முடைய குரூரமான எஜமானனாகிவிட் டது. சமைத்த ஆகாரங்கள், சாராயங்கள், புகையிலை முதலியவற்றைப்போல நாஜூக்கானவை என்று சொன்னால் ஒரு சமயம் அது மிகைபடச் சொல்லிய தாகும்; நம்முடைய முக்கியமான ஆகாரப்பதார்த்தங்கள் யாவையெனில், இயற்கையில் ஏராளமாய் நமக்குக் கிடைக்கக்கூடிய வஸ்துக்களாகிய பால், தயிர், மோர், நெய், பழங்கள், காய்கறிகள் இவைகளே. நமது ஆகாரக் கட்ட டத்திற்கு அஸ்திவாரம் இவைகளே. இந்த மேடையின்மேல் ஆடு, பக்ஷிகள், மீன்கள் நமக்கு நாக்குக்கு ருசியான பதார்த்தங்கள் இவை எரித்துக் கொளுத் திவிடலாம். சமைத்த ஆகாரத்தைக்காட்டிலும் ஜீவஸத்துப் பொருள்கள் நிறைந்து நூதனமானதும் பச்சையானதுமான ஆகாரத்தையே நாம் உட் கொள்ளவேண்டும்.

சமைத்த ஆகாரம் உத்தீபனத்தை உண்டுபண்ணக்கூடியவை. ஆனால் இந்த உத்தீபனத்தினால் அதிகமாகச் சாப்பிடும்படி நேரிடுகிறது. சாப்பிடும் போது உண்டாகும் விருப்பம் சமைத்த ஆகாரங்களை உண்ணும்போதுதான் உண்டாகிறது. சமைக்காத ஆகாரத்தை நாம் அதிகமாக உண்ண முடியாது. அதிகம் உண்ண வேண்டுமென்கிற எண்ணம் தேவையினால் உண்டானதே யொழிய ஆசையினால் உண்டானதல்ல. என்ன தேவை? ஜீவஸத்துப் பொருள்களை அழித்து விடுகிறோம். ஜீவஸத்துப் பொருள்களின் அளவு கிடைப்பதற்காக, எப்படி வைக்கப்போரில் ஊசி விழுந்துவிட்டால் போர் முழுவதையும் கிளறிப் பார்க்கிறோமோ, அப்படியே, ஜீவஸத்துப்பொருள்கள் தேவையான அளவு கிடைக்கும் வரையில் நிரம்ப உண்ணுகிறோம். இது இயற்கை முறை.

நாம் எவ்வளவு ஜீரணம் செய்கிறோமோ அதனாலேயேயொழிய, நாம் உண்ணும் உணவினால் ஜீவிக்கிறதில்லை. அநேகர் தேகத்திற்கு எவ்வளவு தேவையோ அதற்கு மேற்கொண்டு ஜீரணம் செய்துகொண்டு அதனால் சோர்வையை உண்டுபண்ணிக் கொள்ளுகிறார்கள். நமது சதைகள், மனது இவைகளின் மூலமாய் செய்து கொள்வதைக்காட்டிலும் ஜீரணத்தின் மூலமாய் அதிக சீக்கிரத்தில் சோர்வையை வருவித்துக்கொள்ளலாம். அனேகர் இப்போது பிடிவாதமாய், அதிகமாகவே உண்டு வருகிறார்கள். இதுவே அவர்களுடைய தேகங்களில் நீடித்த விஷத்தன்மை உண்டாவதற்குக் காரணம். அதனால் சீக்கிரத்திலேயே கிழத்தனம் அடைகிறார்கள். மரணவிகிதம் அதிகமா யிருப்பதற்கும் இதுவே காரணம்.

நாம் ஒவ்வொருவரும் பழக்கவழக்கங்களில் கட்டுப்பட்டிருக்கிறோம். தேவையான போதாவது, அவைகளை ஒழிக்கவேண்டும். ஆகாரச் சீர்திருத்தம் வரும்போது, சுவற்றில் முட்டிக்கொள்ள வேண்டியதுதான். நாம் தினசரி ஆகாரத்தில் எதாகிலும் மாறுதல் சொன்னால், வீட்டிலுள்ள ஸ்திரீகள் அதற்கு முட்டுக்கட்டைப் போட்டு விடுகிறார்கள். "வயிறு ரொம்ப உண்ண வேண்டியது" என்பதுதான் நமது ஸ்திரீகளுக்குத் தெரியும். ஆனதுபற்றி, ஸ்திரீகளுக்குப் போதனைவேண்டும். அவர்களுக்குப் புத்தி கூர்மையை உண்டாக்கி, அவர்கள் வரும் சந்ததியாரின் தாய்மார்களாக இருக்கும்போது, சீர்திருத்தங்களில், முக்கியமாய், ஆகாரச் சீர்திருத்தத்தில் வழி காட்டும்படிச் செய்யவேண்டும்.

அதிகமாக உண்பதின் பலன்களைப் போக்க, அடிக்கடி உபவாஸம் இருக்கும்படி மதாசாரமாகவே ஒரு பழக்கம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் நாம் உபவாஸ தினங்களில் என்ன செய்கிறோம். உபவாஸம் என்று சொல்லுகிறோமேயொழிய பல (பழ) ஆகாரத்தை எடுத்துக் கொள்வதைவிட்டு, பல (அநேகவித) ஆஹாரங்களை உண்கிறோம். ஒரு ஆகாரத்தைவிட்டு மற்றொரு வித ஆகாரத்திற்கு மாறுவதற்கு உபவாஸம்தான் சரியான மார்க்கம். வாரத்திற் கொருமுறையாவது இரண்டு வாரங்களுக்கு ஒருமுறையாவது உபவாஸம் இருத்தல் நலம். உபவாஸம் எல்லா நோய்களுக்கும் கைகண்ட ஔஷதம்—லங்கணம் பரம ஔஷதம்—என்கிற ஒரு பழமொழி நம்மிடம் வழங்கவில்லையா?

காபி, தேயிலை இவைகளைக் குறித்துச் சொல்லாமல் இந்த வியாஸத்தை முடிக்க முடியாது. இவைகளை மிதமாய்க் குடித்தால் இவை இலேசான உத்தீபனங்கள் ஆகும். அதிகமாய்க் குடித்தாலோ விஷம். இவைகளை அடியோடு ஒழிக்க முடியாத பக்ஷத்தில், மிதமாய்க் குடிப்பதுதான் விதி.

இந்த வியாஸத்தை நன்றாய்ப்படித்து அதன்படி நடக்கும்பக்ஷத்தில், ஆரோக்கியமான வாழ்வு வாழலாம். அதுதான் தகுமான வாழ்வாகும். நமக்குப் பேர் தெரியாத ஒரு கிரந்தகர்த்தா சொல்லிய ஒரு பழமொழியைக் கொண்டு இதை முடிக்கிறோம்.

"நமது வாழ்வு சரியான வாழ்வா?
அது நமது கல்லீரலைப் பொருந்தியது." (ஆ. தீ.)




# சந்திரா

("சோகம்.")

நீர்வேலி ஓர் அழகிய சிறு கிராமம். அது குளிர்ச்சி பொருந்திய தென்பதற்கு அதன் பெயரே சாட்சி பகரும். வாழைத் தோட்டங்களும் கண்ணகல் தூரத்திற்கு அகன்று கிடந்த வயல் வெளியுமே அதை அழகுபெறச் செய்தன. அவ் வயலுக் கணித்தாயுள்ள ஒரு வாழைத் தோட்டத்தின் மத்தியில் இரு வீடுகள் இருந்தன. ஒன்று சுகாதாரத்துக்கு ஏற்ற விதமாய் அமைக்கப் பட்டிருந்தது. மற்றையது ஓர் அழகிய பூங்காவை யுடையது.

பூங்காவையுடைய அழகிய அச் சிறு வீட்டில் வசிப்பவர்கள் இரு பெண்களும் ஓர் வேலைக்காரியுமே. அப் பெண்களில் மூத்தவள் ஓர் விதவை. பெயர் சௌந்தரம். சௌந்தரம் ஓர் விதவையேயாயினும் எல்லா வசதிகளும் பெற்றிருந்தாள். தன் இருபத்தைந்தாம் வயதில் தன் இன்னுயிர்க் காதலனை இழந்த இப் பெண்மணி இடைக் கிடை மன மாறாட்டத்தால் பீடிக்கப்பட்டு வந்தாள். சௌந்தரம் இயற்கையான அழகும், வசீகரமும், இரக்கமும், சாந்தமும் உள்ளவளேயானாலும், விதவையானதாலோ அன்றி என்னவோ வன் சொல் வழங்கும் வழக்கத்தை உடையவளா யிருந்தாள். இரண்டாம் பெண்மணியோ சௌந்தரத்தின் தங்கை சந்திரா. மணம் புரியா ஓர் மங்கை. வயசு சுமார் பதினெட்டு இருக்கலாம். கண்டோர் 'இவள் தங்கப்பதுமை' என்று கொண்டாடத்தக்க லாவண்ய மிக்கதோர் மடமயில். அழகின் அவதாரம்; அடக்கத்தின் உறைவிடம். சந்திரா தமிழில் சிறிது பாண்டித்யமும் ஆங்கிலத்தில் சிறு நூல்கள் வாசிக்கவு மேற்ற அறிவு பெற்று விளங்கினள். அதற்கேற்ற வீரமும் நாகரிகமும் அடைந்திருந்தாள். பிராயம் பதினாறுனவுடன் பள்ளியேகாது தனது இல்லத்திலேயே இருந்து வந்தாள். சந்திரா தன் பத்தாவது வயதில் தாய் தந்தையரை இழந்தவள். இழந்த பின்பு தன் மூத்த சகோதரியின் காவலிலேயே இருந்தாள். சௌந்தரம் தனக்கு உபகார வேதன (பென்ஷன்) மாகக் கிடைத்த 50 ரூபாவையுங் கொண்டு குடும்பத்தை நடாத்தி வந்தாள். தாய் தந்தையரை யிழந்து தனியளாய் விடப்பட்ட சந்திரா தமக்கை வழங்கும் வன் சொற்களினால் பெரிதும் பாதிக்கப் பட்டாளாயினும் 'அடக்கம் அரசாளும்' என்பதைக் கைப்பிடித்து மனங்கோணு திருந்தாள்.

* * * *

சந்திராவின் மனைக்கு எதிராயுள்ளது மணிவாசகனின் மனை. மணிவாசகன் தந்தையார் தாயுமானவர் அவ் வூரில் மிகவுந் தனவந்தர். அவருக்கு

மணிவாசகனை விட இன்னொரு பெண் குழந்தையுமுண்டு. மணிவாசக னுக்கு இருபத்தொரு வயதிருக்கலாம். பளபள வென்று பிரகாசிக்கும் மேனியும் பலரையும் மயக்கும் குணங்களும் உடையவன்.

மணிவாசகனும் சந்திராவும் குழந்தைப் பிராயந் தொடங்கியே உருவத் தையும் நிழலையும் போல் ஒரு பொழுதும் இணை பிரியாது இருந்து வந்தவர் கள். அவ் விரு குழந்தைகளின் ஒற்றுமையையும், பணிவையும், நற்குணத் தையும் அறிந்த எல்லோரும், இவ் விருவரும் வருங் காலத்தில் நம் நாட்டுக் கிரு கண்ணென விளங்குவார்கள் எனப் பேசி வந்தனர். சந்திராவின் தாய் தந்தையார் இவர்களைக் காணுந்தோறும் அளவிலா ஆனந்தமடைந்து "என்று இவர்களை மணமகன் மணமகளாய் காண்போ" மென்று ஏங்குவர். அந்தோ! இவர்கள் இருவரும் அப் பாக்கியம் பெறாமல் சந்திராவின் பத்தாவது வயதில், ஒரே மாதத்தில் இறந்து போயினர்.

பின்பு இவ் விரு குழந்தைகளும் வளர வளர அவர்களிடம் அமைந்த நற்குணங்களும் இழையே வளர்ந்த பரிசுத்த அன்பும் வளர்ந்து கொண்டே வந்தன. மணிவாசகனுக்குப் பதினாறுவயதானவுடன் சந்திரா தன் பதின் மூன்றும் வயதில் பருவமடைந்தாள். பின் சிறிது காலமாக மணியைக் காணுந்தோறும் சந்திரா நாணிக்கோணினாள். ஆயினும் பிறகு வழக்கப்படியே கதைத்தும் விளையாடியும் வந்தாள். மணிவாசகனும் சந்திராவும், அடிக்கடி சந்திராவின் வீட்டுக்குப் பின் பக்கமா யமைந்துள்ள பூங்காவில் சந்தித்துப் பலவிதமான பொருள்களிலும் தங்கள் அறிவுக் கெட்டியபடி பேசி வருவார் கள். களிகொண்டாடும் வண்டுகள் போலவே அவ் விரு காதலரும் காத லெனும் கள்ளுண்டு திளைத்து அப் பூங்காவிடை மலர் சூடி விளையாடுவர். அக் காதலரிருவரும் ஒருவரை யொருவர் பிரிவதில்லை யென்றும், தாங்கள் ஒருநாள் பௌர்ணமை யன்று பூங்காவில் பிறரை மணப்பதில்லை யென்றும் சத்தியம் செய்து கொண்டு, ஆலிங்கனத்துடன் பிரிந்தனர்.

சத்தியம் செய்துகொண்ட சில தினங்களுக்குப்பின் மணிவாசகன், உயர் தர படிப்பு படிக்க, தலைநகர் செல்லும் காலம்வந்தது. மணிவாசகன் செல்லும் பொழுது சந்திராவைச் சந்தித்து பல தேறுதல் கூறிய பின்பே சென்றான். மணிவாசகன் தன் நண்பன் கணநாதனிடம், சந்திராவிற்கு வீட்டிலுறும் அல் லல்களைப்பற்றித் தனக்கு அறிவிக்குமாறு அறிவித்துவிட்டுச் சென்றான்.

வாசகன் கலாசாலையில் இருக்கும்பொழுது தன் தங்கைக்கு ஓர் வர னைத் தேடி மணத்தை முடிக்கு மெண்ணத்துடன், தானே நேர்சென்று மணி வாசகனின் பெற்றோரை மணிக்கும் சந்திராவிற்கும் விவாகம் முடிக்கும் விடய மாகக் கேட்டான். மணியின் தாய்தந்தையர் சந்திராவிற்கும் மணிக்குமுள்ள அன்பை அறியாமல், சௌந்தரத்தின் மனக் குழப்பங்களையும், வன்சொல் வழங்கும் வழக்கத்தையும் நினைத்து சந்திராவின் குணங்களையும் தப்பாக மதித்து மறுத்துவிட்டனர். சௌந்தரம் வழக்கப்படி பல இழிவசனங்கள் வழங்கினன். இதனால் மணியின் பெற்றோருக்கும், சௌந்தரத்துக்கும் பகைமை யேற்பட்டு சௌந்தரம் அவர்களோடு பழகுவதை விட்டுவிட்டான். தன் ஒரு சிறுமகளான மணிக்கொடியையும் மணிவீடு போகாது மறித்து விட்டான்.

மணிக்கொடி குணத்திலும் அழகிலும் சந்திராவின் சாயல் என்றே சொல்லலாம். மணிக்கொடி மணிவாசகன் இல்லம் போனாலும் அவன்றன் சிறு தங்கையோடு பேசினாலும், மணிக்கொடிக்கு அடிவிழும்.

இதையறிந்த தாயுமானவர் சௌந்தரத்தை இன்னும் வெறுத்தனர். சந்திரா தாயுமானவருடன் தன் மூத்தாள் சமர் விளைவித்துத் தன் கதியைத் தடைப்படுத்தியதை யறிந்து ஆற்றொணுத்துயரம் அடைந்தாள். தேற்றுவாரொருவரின்றிப் பின்பு சிறிதுநாளில் நோய்வாய்ப்பட்டாள். பின்பு அடிக்கடி அடிவாங்கி வருவதும் அவள் மனதைப் பாதித்தது. அதனால் மணிக்கொடியை, அடித் தண்டனையிலிருந்து தப்புவிக்கும் நிமித்தமாக மணிவீடு போகவேண்டாமென்று வற்புறுத்தினன். மணிக்கொடி சந்திராவும் தனக்குப் பகையாளியென்றே நினைத்தாள்.

கணநாதன் மணிக்கொடி படிக்கும் பள்ளிக்கு இடைக்கிடை செல்வது வழக்கம். அங்கு மணிக்கொடியுடன் பேசி சந்திராவின் நோயைப்பற்றியும், தேக மெலிவைப்பற்றியும் கொடிக்கிடப்பட்ட கட்டளையைப்பற்றியும் அறிந்து மணிக்கு எழுதியனுப்பினன். மணிவாசகன், சந்திரா மணிக்கொடிக்கிடப்பட்ட கட்டளையின் உண்மை நோக்கத்தை யூகித்தானாயினும், நிச்சயமாயெடுத்துக்கொள்ள இயலாமற் போய்விட்டான் 'ஒருவேளை தமக்கைக்கும் என் தகப்பனருக்கும் நேர்ந்த பிரிவினால் என்னை வெறுத்தாளோ?' என்றும் ஐயுற்றான். இறுதியில் சந்திராவைச் சந்தித்துப் பேசவேண்டுமென்று எண்ணினன். விடுமுறை நாட்களுக்கு வீடு திரும்பினன். வந்த தினமே, வழக்கப்படி பூங்காவிற்கு மறைந்து சென்றான்; சந்திராவைக் காணவில்லை. அடுத்தடுத்து நாலுநாள் சென்றான். ஒருநாளும் சந்திராவைக் காணவில்லை. ஆற்றொணுத் துயரடைந்தான். சந்திரா தன்னை வெறுக்குங்காலம் நேர்ந்ததே என்று கலங்கினன்.

பாவம்! சந்திரா நோய்வாய்ப் பட்டிருக்கின்றாள் என்று யார் மணிக்குச் சொல்லுவார்! கணநாதன் கூறினனாயினும் தேறுதலடையாமல், கொழும்பிற்குச் சென்றால்தான் தன்துக்கம் ஆறுமென்று பள்ளிசென்றான்.

மணி வந்தநாட்களில் சந்திரா தன் பிணியையும் நோக்காது, காதலனைக் கண்டு ஆதரவு கொள்ளலாம் என்று கருதி பூங்காவிற்கு வருவது வழக்கம். நோயின் கொடுமையால் அதிகநேரம் அவள் இருக்க இயலாமற் சென்றுவிடுவது வழக்கம். அவளும் மணியைக் காணுதபடியால் தன்னைத் 'தாய்தந்தையர் ஏவலினால் வெறுத்தானே' என்றும் சந்தேகித்தாள். ஒரு சிறிது நேரம் தங்கி யிருப்பாளேயானால், மாலை இருளில் மனிதர் கண்கட்கு மறைந்துவரும் மணியைக் கண்டிருப்பாள். நோய் இடங்கொடுக்கவில்லை. உடைந்த உள்ளத்துடன் வீடேகுவாள்.

இந்நாட்களில் (வழக்கப்படி யாழ்ப்பாணத்தில் எங்கும் நடைபெறுவதைப் போலவே) நீர்வையில் ஓர் கோயில் பரிபாலனத்தில் இருகட்சிப் பிரிவாயிற்று. இரு கட்சியாருக்கும் பலமான வழக்குகளும், அடிக்கடி சண்டைகளும் நேர்ந்தன. சௌந்தரத்தின் ஒன்றுவிட்ட சகோதரர்களும் அவளும் ஒரு கட்சியுமாயும், தாயுமானவர் மறு கட்சியிலுள்ளவராயு மிருந்தனர். இக் கட்சிப்பிரிவும் 'பட்ட காலிலே படும்' என்றபடி காதல ரிருவர் தலைமேல் இடித்தது.

ஒருநாள் இரவு சந்திரா படுக்கை சென்றாள். நித்திரை வரவில்லை. மனமோ ஒன்றிலும் செல்லாது தந்தளித்தது. உலகத்தோடு அவள் உள்ளமும் இருள் மயமாகிவிட்டது. ஒருவாறு தன் நிலையைப் பின்வருமாறு கூர்ந்து ஆலோசித்தாள். "என்னைப் பெற்றெடுத்தோர் இவ்வவனியில் இருந்தால் இவ்வின்னலும் நேருமோ? அக்காவின் கீழிருந்து வீண் துன்பங்களுக்கு ஆளாகவும் நேருமோ! என் பெற்றோரிருந்தால் எவ்விதத்தும் மணியை எனக்கு மணாளன் ஆக அமைப்பார்களல்லவோ! அல்லது சகோதரிதானும் தாயுமானவருடன் பகைக்க வேண்டுமோ? கோயிலே காதலுக்குக் கூற்றோ! 'கைலை ஈசா இதுவும் உன்னருளோ?' இறுதியில் மணியுமா மனந் திரும்ப வேண்டும்? ஆ! காதல் நோய்க்குச் சாதல் மருந்தோ? வேண்டாம். தற்கொலை நரகளிக்கும். 'வருவது தானேவரும்' பார்ப்போம்." பின்பு தானே தன்னைத் தேற்றிக்கொண்டாள்.

* * * *

வருடப்பிறப்பு விடுமுறைக்கு மணி வீடுசேர்ந்தான். சேர்ந்த அன்று பூங்காவிற்குச் சென்றான். சந்திராவைக் காணவில்லை. பாவம்! சந்திராவிற்கு மணிவந்தது தெரியாது. அதனால் அன்று பூங்கா போகவில்லை. மணிக்குத் துக்கமும் ஆச்சரியமும் பலப்பட்டன; காரணம் ஒன்றுமே விளங்கவில்லை. கோயிலோ காதலியைப் பிரித்தது என்று ஏங்கினான். ஏங்கியென்! வாடிய முகத்துடன் வீடடைந்தான். அன்று துயிலவேயில்லை. சந்திரா சத்தியம் திறம்பினாள் என்று முடிவு செய்துகொள்ளவு முடியவில்லை. இறுதியில் மறுநாளும் பூங்கா சென்று பார்க்கிறது; சந்திக்காவிட்டால் சோரத்தனமாக வீட்டில் நுழைந்து சந்திக்கிறதென்னும் தீர்மானத்துடன் துயில் கொண்டான்.

மறுநாள் தீர்மானத்தின்படி மணி பூங்கா சென்றான்; சந்திராவைக் காணவில்லை. சிறிதுநேரம் தாமதிப்போமென்ற எண்ணத்துடன், அருகினின்ற ரோஜாச்செடியொன்றின் மலர் ஒன்றைப் பறித்து, அதைச் சந்திராவெனப் பாவித்து குளிர்ந்த ஓர் முத்தம் ஒன்று அதற்கு அளித்து அதோடு என்னென்னவோ எல்லாம் பிதற்றிக்கொண்டு நின்றான். இதற்கிடையில் மணியின் வரவறிந்து மணியின்று பூங்காவிற்கு வருவானோ என்னும் சந்தேகத்துடன் சந்திரா தயங்கித் தயங்கிக் காவிற்கு வந்தாள். அங்கு ரோஜாமலருடன் ஜோராய்ப் பேசும் மணியைக் கண்டாள். நம்ப இயலாமற் போயிற்று. "என்னைச் சிலநாள் வெறுத்த காதலர் என்னைத் தேடி வந்திருக்கிறாரா? என்ன! என் கண்கள்தான் என்னைப் பொய்த்தாலும் காதுகளுமா பொய்க்கவேண்டும்? மலரோடு என்னவோ பேசுகின்றாரே, மறைவாய்ச் சென்று அதைப் பறிப்போம்" என்று எண்ணி அடிமேலடி வைத்துச்சென்று மணியின் கையிலிருந்த மலரை வெடுக்கெனப் பிடுங்கினள். மணிக்கொன்றுமே விளங்கவில்லை. இறுதியில் தன்மலர் கவர்ந்தவள் தன்மனங் கவர்ந்த மங்கையே என அறிந்து, "ஏ கள்ளியே! ஏனென் மலர்தனைக் கவர்ந்தாய்?" என ஓர் புன்னகையுடன் கேட்டான்.

அதற்குச் சந்திரா, "நானோ கள்ளி. ஏன் நீரல்லவா, அந்நியர் பூங்காவில் மறைவாகப் புகுந்து மலர் பறித்தது. அப்படியிருக்க, யாரில் கள்ளத்தனம் மிகுந்தவர்?" என வினவினள்.

"போகட்டும்; பூ கவர்ந்தேன் யான். மனம் கவர்ந்தாய் நீ. நீதான் அதிகக் குற்றம் செய்தாய்" என மணி இன்னோர் வினா எழுப்பினன்.

"காதலா, யான் மனங் கவர்ந்தேனாயினும் இவ்வூரிலேயே இருக்கின்றேன். நீரோ உண்மைக் கள்வனேபோல் என் மனத்தைக் கவர்ந்து தூர தேசங்கொண்டு சென்றீர். யார் கள்வர்?" என்றாள் சந்திரா.

"யானே கள்வன், யானே கள்வன்" என்று மணி அளவிலா ஆனந்தத்தோடு சந்திராவை அணைத்து இறுகத் தழுவினான். சந்திராவின் சந்தோஷத்தை அளவிட வல்லார் யார்!

இவ்வின்ப நிகழ்ச்சியி லிருக்கும்பொழுது சௌந்தரம் சோலைப்பக்கம் வரும் ஓசை கேட்டு மணி திடீரென மறைந்தனன். சந்திராவின் முகம் வாடிற்று. ஆயினும் சகோதரிக்குக் காட்டப்படாதென்னும் நோக்கத்துடன் புன்சிரிப்பொன்றை வலிய வருவித்துக்கொண்டு வீடு சென்றாள். செல்லும்பொழுது மணியாதாயினும் ஒன்றும் கூறாமல் மறைந்து போனது அவளுக்கு மனதில் இடரை விளைத்தது. அன்று சஞ்சல நெஞ்சுடன் சந்திரா சயனித்தாள்.

மறுநாள் அந்திக்காலம் மணியைச் சந்திக்கலாம் என்னும் நோக்கத்துடன் சந்திரா பூஞ்சோலையிற் புகுந்து ஆலோசித்துக் கொண்டிருந்தனள். வழக்கப்படி மணியும் வந்தான். மணி, வாடிய முகத்துடனிருக்கும் அந் நங்கைநல்லாள் அருகிற்சென்று, "மானே! வாடியமுகமேன்?" என்றான்.

சந்திரா:—"வாடிய முகமேனோ நீடிய பிரிவே."

மணி:—"நீடிய பிரிவைத் தேடியது நீயே!"

ச. ரா:—"எங்ஙனம்? காதலா?"

மணி:—"கண்ணே, சென்ற விடுமுறை நாட்களில் பூங்கா சோரதது என்னோ?"

ச. ரா:—"ஐயோ! என்றும் வருவேனே! நீர் வராததற்காக என்மேல் பொய்க்குற்றம் ஏற்றலாமா?"

மணி:—"சந்திரா! கண்ணே! நான் சற்று இருள் பரவிய பின்பே இங்கு வருவது."

ச. ரா:—"நான் நோய்வாய்ப்பட்டிருந்தேனாதலின் மணிக்கணக்காய் இருக்க இயலவில்லை."

இவர்கள் இப்படிச் சல்லாபித்துக் கொண்டிருக்கும்பொழுது சந்திரனும் தன் கிரணங்களை அழகாக வீசிக்கொண்டு மூகில்களூடே பிரகாசித்தான். மணி சந்திராவை நோக்கினான். சந்திராவின் தேகம முதல் நாளினும் பார்க்க மெலிந்திருந்தது. அவன் மனம் பதைபதைத்தது. உடனே அன்பொழுகும் குரலில்,

"கண்ணே சந்திரா! அடிக்கடி உன்மேனி வளர்வதும் மெலிவதும் ஏன்?"

ச. சா:—"காதல, நன்று உசாவினீர். சந்திராவென எனை விழித்தும் பின் வளர்வதற்கும் தளர்வதற்கும் காரணங் கேட்கின்றீரே. சந்திரனின் இயற்கை வளர்வதும் பின்தேய்ந்து மெலிவதும்தானே."

மணி:—கண்மணி! கவித்திறம் எனக்கு விளங்காது உண்மையைக் கூறு."

ச. ரா:—"உயிர் கவர்ந்த கள்வ! உண்மையே உரைத்தேன்."

மணி:—"ஆருயிரே அங்ஙனமாயின் அமாவாசை யன்று மறைந்தா விடுவாய்?"

மணி இங்ஙனம் புகன்றபொழுது சந்திராவின் உடம்பு துடிதுடித்தது. இன்னதுதான் என்று கூற முடியாக் காரணத்தால் அவள் உள்ளம் நடுங்கிற்று. முத்தனைய கண்ணீர்த்துளிகள் அவளின் வசீகரக் கன்னத்தால் வழிந்தோடின. மணி கவனமாய் நோக்குவதற்கிடையில் சந்திரா கண்ணீரைத் துடைத்துவிட்டு அன்பொழுகும் கண்களினால் அவனை நோக்கி,

"அன்பனே, என் பிணியோ சந்திரனோடும் வளர்வதும் குறைவதுமாயிருக்கின்றது. சந்திரன் தன் நாமத்தை யான் சூடியதனாலோ என்னவோ, என்னைத் தன் கொடிய கிரணங்களினால் காய்ந்துகொல்வான். நோயேன்? பிரிவதில்லையெனக் கூறிய காதலர் கல்வி நிமித்தமாகப் பிரிந்தாராயினும் என்னைக் காணுமலா போகவேண்டும்? பின் அக்குயிரும் இங்குடலுமான நேரத்தில் நோய கொள்ளாம விருப்பதேது?" என மொழிந்தாள்.

மணி:—"கண்ணே ஆருயிர்க்காதலி, இதெல்லாம் என் பொருட்டாகவா? சரி இனிமேல் நான் உனைப் பிரியேன் இது சத்தியம்."

ச. ரா:—"கண்ணாளா, பெற்றோர் மறித்திடில் யாது புரிவீர்?"

மணி:—"காதலுக்கு ஓர் வரம்பு முண்டோ? காதலி, சந்திரா நீ என்னைச் சந்தேகியாதே. நேற்று நான் உன் சகோதரிக்காகவே பயந்தோடினேன்."

ச. ரா:—"பாவம்? என் சகோதரி சிறிது நாளாக ஆழ்ந்து யோசித்த வண்ணமாகவே புலப்படுகின்றாள். நோயும் அவளை வருத்துகின்றது. நானும் கவனமாய்ப் பாதுகாத்து வருகின்றேன்."

மணி:—"கண்ணே, இதுதான் சமயம். நீ நின் காதலை வெளியிடு. சகோதரி எவ்விதத்தும் மனமிரங்குவாள், திண்ணம். நானும் என் தந்தையை வேண்டுகின்றேன். மறுத்தால் பின் பார்ப்போம். கோயில் பிரி வொன்றும் செய்யாது."

இத்துடன் சம்பாஷணை ஒழிந்தது. காதல ரிருவரும் சென்றனர்.

மணி வீடு சென்றான். முதலில் தன் அன்னை தயவுபெற்றே தன் தகப்பனிடம் போதல்வேண்டுமென்று எண்ணினான். தன் தாயார் தனபாக்கியத்தை யடைந்தான். சந்திராவின் சகல குண மேன்மைகளையும் எடுத்தோதினான். 'சந்திரா' எனச் சாற்றியதுதான் தாமதம்; சர்ப்பமேயாயினள் தனபாக்கியம். "அன்னையே! அருள்புரிவாய், சந்திரா உண்மையில் சரஸ்வதியே; காதல்கொண்டேன் பாவியேன் ஆதலின் இரங்குவாய் தாயே" என

அடிவிழுந்து அழுது அழுது மன்றாடினன் மணி. காதலின் பாக்யம் அறிவாரோ தன ராகசியம்? "மதிகெட்ட மடையா மருட்டினன் சிறுக்கி உன்னை, அமாவாசைக்கடுத்த நாள் அம்மான் மகள் உன் பெண்டாட்டி. நாள் குறித்தாயிற்று பிரதமை யன்று பந்தலுமாரம்பம். சந்திராவை, நீ சந்தியாதே போ" என முழங்கினன்.

மணிவாசகன் உளத்தில் இடிவிழுந்தது. 'இறுதியில் எந்தையே தஞ்ச' மென்றெண்ணி தந்தையை நாடினன். தன் தந்தையின் அடிமீது தலைபடத் தரைமேல் வீழ்ந்து, கல்லையும் கரைக்கும் கனிந்த குரலில், "எந்தையே! அப்பா! நான் வேண்டுதல் கேட்டருள்புரிதல் வேண்டும்; சந்திரா என் சொந்தமாதல் வேண்டும். வேறு விவாகம் நான் புரியாதிருத்தல் வேண்டும், வேண்டும்" என விதிர் விதிர்த்தான்.

தாயுமானவரோ மணியின் மாமனுருடைய மகளையே மருமகளாகக் கொண்டு மணத்திற்கு நாளும் குறித்துவிட்டார். அவரா மனமிரங்குபவர்? தகித்தாலும் தாயுமானவர் தம்நிலை பிறழார். ஆயினும் பணிவாய்க் கூறிடில் மணி மனந்திரும்புவானென நினைத்து, "மகனே என்ன சொன்னாய்? உனக்கு விவாகம் பிரதமையன்று. சந்திரா உனக்குத் தகுந்தவளல்லள்; அவள் உனக்கு ஏற்றவள் அல்லள். அவளை மறந்துவிடு" எனக் கூறினார்.

மணியின் கண் மனம் யாவும் மின்னிற்று. பிதாவின் பாதத்தில் பின்பும் விழுந்து பிரார்த்தித்து, "தந்தையே! நான் சந்திராவைப் பிரியேன். பிரிந்திடில் உயிர்தரியேன் ஒரு கணம். இது சத்தியம்" எனப் பிரலாபித்தான்.

மணியின் தாயும் ஆனவரோ உரத்த ஓசையோடு, "வாசகா, உனக்கு நாச காலம் வந்தது. பயமுறுத்துதல் பயனளிக்காது. போ; சந்திராவை மற. வரும் விவாகத்தை எதிர்பார்" என முழங்கினர்.

இவ்விடியோ மணியின் இருதயத்தை ஊடுருவிற்று. செய்வதொன்றறியானாய்த் தன் அறை சேர்ந்தான்.

இஃதிங்ஙனமிருக்க, சந்திரா யாது புரிந்தனள் எனப் பார்ப்போம். வீடு சேர்ந்த அம்மட மங்கை தன் தமக்கையை நாடி அவள் அறைக்குச் சென்றாள். தயங்கித் தயங்கித் தன் தங்கை வருவதை யறிந்த சௌந்தரம், அவள் தன் கருத்தை அறிந்திருந்தாளாயினும், வெளிக் காட்டாது அவளை நோக்கி, "யாது காரணம் என்னறை வந்தது?" என வினவினள்.

சந்திரா பயத்துடன், "மணிக்கொடிக்கு விடுமுறையாம். விளையாட்டில் விருப்பங்கொண்டு, ம.........தாயுமானவர் வீடுபோக விரும்புகின்றாள். அவளை நாளையதினம் அங்கு விளையாடுவதற்கு அநுமதி கொடுங்கள்" எனக் கேட்டனள்.

சௌந்தரம் அச்சமயம் சூர்ப்பனகையே யாயினள். "இவையெல்லாம் நின்னால் நிகழ்ந்தன. இது உன் சூது. கொடி அங்குபோக ஒருகாலும் விரும்பாள்" எனக் கர்ச்சித்தாள்.

"அருமை அக்காவே! உண்மையே கூறினேன். சூது யான் புரிய

வில்லே. கொடியே பிடிவாதம் செய்தான்'' என்று மெல்லிய குரலில் மொழிந்தாள் சந்திரா.

''போ, புத்திகெட்ட நாயே; எதிர்த்தா பேசுகின்றாய்! உன் மனத்திலுள்ளதை யானறிவேன். அதொருபொழுதும் சந்தியாது. இது சத்தியம். மீறிடில் நீ பட்டினிதான்'' என அதட்டினன் சௌந்தரம். சந்திராவும் விதியை நொந்தவண்ணம் தன் அறை சென்றாள். பின் ஊணேது? உறக்கமேது?

மணவினைக்குக் குறித்த நாளும் நெருங்கிற்று. மணி தன்னால் ஆன மட்டும் பிரயாசைப்பட்டும் பெற்றோரின் மனதைத் திருப்ப இயலவில்லே.

அமாவாசை யன்று இரவு மணிக்கு உறக்கமே வரவில்லே. சந்திராவின் சுந்தரத் தோற்றமே எங்கும் தோன்றிற்று. கண்களோ கரிய முகில்களே போன்று தாரை தாரையாய் நீரைப் பொழிந்தன. மனமெனிலோ அனலிடைப்பட்ட மெழுகே! அவன் தேகம் பதறிற்று. கடைசியில் அவன் வாய்விட்டு ''ஈசா! பெற்றாரே புதல்வர்க்குக் கூற்றாயமைகின்றனர். காதலிக்காத காரிகை யொருத்தியை வதுவை செய்வது பெரிய பேதமையன்றோ? பேதமைதான் கொள்ளினும் காதல் தவிர்த்தல் எங்ஙனம்? சிந்தையில் உறையும் என் தெய்வமே! சந்திரா! நின்னைப் பிரிப்பதும் நினைக்கக்கூடுமோ? எப்படித்தான் பிரிக்க முடியும்? பிரியமுடியும்?'' என அழுதான். உடனே படுக்கையைவிட்டு நாளைக்குக் கலியாணமா? என்று கூறிக்கொண்டே எழுந்தான். நடக்க இயலாமல் கால்கள் தள்ளாடின; கண்கள் வீங்கியிருந்தன. தான் படிக்கும் அறைக்குச் சென்றான். அங்கு ரசாயன மருந்து அடுக்கியுள்ள வரிசையிலிருந்து ஒரு புட்டியை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு, வெளி வந்து சந்திராவினது பூந்தோட்டம் நாடிச் சென்றான்.

இரவு நாலு மணியிருக்கலாம். அமாவாசை யிருள் அச்சத்தை விளைத்தது. பூமாதேவியும் இருட் கம்பலத்தால் போர்த்திக்கொண்டு ஆழ்துயில் புரிந்தனள். உலகமே இறந்துவிட்டது என்று சொல்லலாம். எங்கு பார்த்தாலும் ஒரே அந்தகாரம்; எல்லாப் பிராணிகளும் நித்திரை புரிந்தன. நித்திரை! உண்மையில் உயிர்களேயெல்லாம் துன்பங்களின் கொடிய கண்களிலிருந்து காப்பாற்றும் திரை. சஞ்சலத்துக்கோர சஞ்சீவி. அமைதியின் அரண். உள்நாட்டுச் சண்டையை நீக்கும் நீதிபதி. இறத்தலின் இளையவன்.

பேய்களும் துயில்கொண்டன. ஓரிடத்திலிருந்தும் ஒருவித ஒலியும் கிளம்பவில்லே. மெல்ல மெல்ல, மணி, தன் அடிகளே வைத்து பூங்காவை யடைந்தான். அவன் பாதங்களோ ஓர்வித ஓசையு முண்டாகவில்லே. 'ஒளியென ஒன்று உண்டோ உலகினில்!' என்று ஐயுறத்தக்கதாயிருந்தது. எனினும் ஒரேஒரு ஒலிதான் இருந்தது. அது யாது? ''காதலோ காதலினிக்காதல் கிடைத்திலதேல சாதலோ சாதலெனச் சாற்றுமொரு பல்லவிதான்'' மணியின் 'உள்ளமாம் வீணை தனில் உள்ள வீடத்தனையும் விள்ள' ஒலிக்கும், ஒலி. அதுவன்றி 'வேறோ ரொலியில்லே'—மணி மௌனமாகச் சந்திராவும் தானும் தினம் சந்தித்துப் பேசும் மலர்ச் செடியண்டை சென்றான். அம்மலர்ச் செடியின் கீழிருந்து தன் விதியை நொந்து புலம்பினன்.

''அந்தோ! நாளைக்கல்லவா முகூர்த்தம்? ஈசா! கலைவாசா! உன் திருவடியே சரணம், சரணம். மறு பிறப்பிலாகுதல் மங்கை சந்திராவை மணி

வாசகன் மணந்திட மனமிரங்குவாய். ஆ! முகூர்த்தமே! முகூர்த்தத்திற்கு முன் கூற்றே! நீ வா!" என்ன விக்கியகுரலில் விம்மியழுது புட்டியிலுள்ளதை யருந்தினான். அந்தோ! வேதனை கொடுக்கும் மருந்தாயினும் துடி துடித் தானல்லன் மணிவாசகன். சிறிது நேரத்தில் உயிர் நீங்கிற்று. மலர்ச்செடி யருகினில் மணிவாசகன் பிரேதமானான்.

சந்திராவோ இதற்கிடையில் மணி பெற்றோரோடு மாறுபட்டுக் கொண்டதாகவும், தன்னைத் தேடி பூங்கா சேர்ந்தது போன்றும் கனவு கண்டு விழித்துப் பூங்கா நோக்கி வந்தாள். அவள் தன் வலது கண் துடித்தது. கால்கள் தள்ளாடின. மலர்ச்செடி மருங்கு சென்றாள். மனித உருவமொன்று தரை மீது கிடைப்பதைக் கண்டாள். உருவத்தை நெருங்கினள். பார்த்தாள். மணியே யஃதென வறிந்தாள். "மணி! மணி! மணி!" எனக் கூவினாள்; "காதலா! என் அன்பே! எழும்பாயோ!"—என அலறினாள். மாண்டார் வருவாரோ? மணி பேசுவானோ? கண்களில் நீர் வடிந்த படியே தன் காதலன் நெஞ்சினில் கையை வைத்தாள், ஜில்லென்றிருந்தது. அந்தோ! சந்திராவின் தேகமோ அனலிடை மெழுகென உருகிற்று. மணி இறந்தான் என அறிந்தாள். காரணம் யாதென அவன் கரங்களைப் பற்றினாள். அந்தோ கொடிய வினையே! மணி உண்டெஞ்சிய திராவகம் அப் புட்டியில் சிறிதிருந்தது. அதைத் தன் அழகிய கரங்களால் பற்றிக் கொண்டு அதில் எழுதியிருந்ததை வாசித்தாள். "பொட்டாசியம் சயனயிட்" (Potassium cyanide) என வாசித்தாள். உடனே வாய்விட்டு "ஆருயிரே! அருமணியே! காதலா! நஞ்சினால்—பாவி எந்தனால் இறந்தனையோ! ஐயோ! கடவுளே! இதுவுமுன் திருவருளோ! இன்ப நிதியே! அன்புவடிவே! மித்திரா பிரிந்தாயோ? பாவி என்னைத் தனிவிட்டனையோ! ஈசா! என் செய்வேன்! என்னாவி சோருதே! உளம் உடைந்ததே! ஐயோ! ஐயோ!" என்று அலறினாள். பாதுகாவலரே! காதலின் ஆட்சியை அறியீரோ! அம்மம்ம! காதல் கொடிது! கொடிது! அவமே பிரிந்த என் ஆருயிரே! வான்சேர்ந்த மாணிக்கவாசகா! நின் தேன் கலந்த வாசகத்தை இனி எங்கு கேட்பேன்! ஆ! பாழும் கனவே! என்னைச் சிறிது முன் எழுப்பினையோ! வன்னெஞ்ச மலர்மரங்காள்! என் செய்தீர் என் அன்பனுக்கு! ஆ! அன்று உரையாடியபொழுது "ஆருயிரே! அங்ஙனமாயின் அமாவாசையன்று மறைந்தா விடுவாய்!" என்றாயே காதலா! நற்சோதிடம் கூறிய பிராணபதி! எங்கு சென்றொளித்தாய்? வாராயோ பாரினில் மறுமுறை! எம்பெருமானே! என்செய்வேன்! என்செய்வேன்! என்னுயிர் கொண்டவனுயிர் எங்கு சென்றதோ! ஒன்றும் தெரிகிலேன்! கருணையங்கடலே! கிருபாமூர்த்தி! இதுவுமுன் சோதனையோ! இதுதகுமோ! ஆ........! "காதலினால் சாகாமலிருத்தல்கூடும்" என்றானே ஓர் கவி! அக்கூற்று எங்களில் பொய்த்ததோ! எனக் கதறினாள். பேதமை என்பது மாதர்க் கணிகலமன்றோ! பேதமையொடு காதற்போதை மீறிடில் என் செய்வாள் மெல்லியலாள்! பின் "காதலா! ஆருயிரே! இறைவா! இன்பனே! அன்பா! மணியே! வாசகா! ஒன்று மறிகிலேனே! ஆ ஹா! எஞ்சிய நஞ்சே! தஞ்சம் நீயெனக்கே! சீ! என்செய்தேன்! இம்......" என்று கூறியபடியே, வாயினில் எஞ்சிய நஞ்சை ஊற்றினாள். பின் மண்மீது பிணமாய் விழுந்தாள் சந்திரா.

# குரவைக் கூத்து.

("கான்")

சிலப்பதிகாரம் ஐம்பெருங் காவியங்களில் ஒன்றென்பது அனைவரும் அறிவர். அதில் ஆய்ச்சியர் குரவை என்ற அதிகாரத்தில் மாதரியின் முற்றத்தில் ஆடப்பட்ட வடப்பாலை என்னும் குரவைக் கூத்து ஆடும் இடம் பின்வருமாறு வருணிக்கப்பட்டுள்ளது.

"இருசாண் குறுக்களவாக ஒரு வட்டமிட்டு, அவ்வட்டத்தின் திசைகள் நான்கன்பேரிலும் இவ்விரண்டு கோடுகளிட்டுக், கோணத்திசைகள் நான்கினும் ஒவ்வோர் கோட்டினைப் போக்கி அவற்றிற்குமேல் மண்டலஞ் செய்து பன்னிரண்டு வீடுகள் செய்வதாம்." அப்பன்னிரண்டு வீடுகளில் இராசிகள் பன்னிரண்டனுள் மேஷமுதல் கன்னி வரையில் உள்ள ஆறு இராசிகளையும் வலதுபுறமிருந்து இடதுபுறம் வரையிலுள்ள ஆறு வீடுகளிலும் துலாம்முதல் மீனம் வரையிலுள்ள ஆறு இராசிகளையும் இடது புறமிருந்து வலதுபுறம் வரையுள்ள ஆறு வீடுகளிலும் அமைத்தல்வேண்டும். இவ்வண்ணம் அமைந்த பன்னிரண்டு இராசிகளில், இடபம், கற்கடகம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம், மீனம் என்னும் ஏழு ராசிகள்மட்டும், யாழ் நரம்புகள் ஏழுடன் இயங்குவனவாகும்.

யாழ் நரம்புகள் ஏழாவன:—குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பனவாம. ராசிகள் யாழ் நரம்புகளுடன் சேர்ந்து வருமிடத்து குரல் நரம்புடன் துலாமும், துத்த நரம்புடன் தனுசும், கைக்கிளை நரம்புடன் கும்பமும், உழை நரம்புடன் மீனமும், இளி நரம்புடன் இடபமும், விளரி நரம்புடன் சிங்கமும் சாரும். இவ்வேழு நரம்புகளும் நிற்குமிடங்களிற் கண்ணன் முதலியோர் அக்காலத்தில் நின்று குரவையாடிய முறைப்படியே, மாதரி அவ்வேழு கன்னியரையும், குட திசைமுதல், இடமுறையாகக் குரல் முதலிய நரம்பிடங்களில் நிறுத்தினள்.

குரல் நரம்பிடத்து நின்றவட்கு மாயவன் எனவும், துத்த நரம்பிடத்தில் நின்றவட்குப் பின்னை யெனவும், கைக்கிளை நரம்பிடத்தில் நின்றவட்கு ருக்குமணி எனவும், உழை நரம்பிடத்து நின்றவட்கு வாருணி எனவும், இளி நரம்பிடத்தில் நின்றவட்கு வெள்ளை (பலதேவன்) எனவும், விளரி நரம்பிடத்தில் நின்றவட்கு இரேவதி எனவும், தார நரம்பிடத்தில் நின்றவளுக்கு அசோதை எனவும் அவள் பெயரிட்டாள்.

பின்னர், அவள் துழாய் மாலையை மாயவன் பெயர்கொண்ட மங்கையின் கழுத்திலிட்டு அவன் திருமகளையும் மறக்கும்படி செவ்விவாய்ந்த பின்னைப் பிராட்டியின் மேன்மையை வியந்து நின்றாள். அவ்வேழு கன்னியரும் அவ்வட்டப்பாலை மண்டிலத்திற் சம நிலையாக நின்று தம்முள் கற்கடக்கை (நடுவிரலும், அணிவிரலும் மடக்கி, மற்ற இரு விரல்களையும்)

கோத்து மண்டலித்துச் சூழ்ந்தனர். அவர்களுக்குள், குரல் நரம்பிடத்தில் நின்ற மாயவனாகிய கன்னி, தன் இளையாகிய துத்த நரம்பிடத்துப் பிஞ்ஞையினை நோக்கி, "கொல்லைப்புனத்துக் குருந் தொசித்தானை முல்லைத் தீம் பண்ணால் பாடியாடக் கடவோம்" என்றாள். அவரும் மற்றையோரும் "ஓம்" என அதற்கிசைந்தனர். அவ்வளவில் குரல் நரம்பாகிய மாயவன் என்பாள் மந்த சுரமாகவும், துத்த நரம்பாகிய பிஞ்ஞை என்பாள் வலிசுரமாகவும் விளரி நரம்பாகிய ரேவதி என்பாள் வலிமையில்லாத மந்த சுரமாகவும், துத்த நரம்பாகிய பிஞ்ஞைக்குப் பற்றாகப் பின்வரும் பாட்டுக்களைப் பாடினர்:—

"கன்று குணிலாகக் கனியுதிர்த்த மாயவன்
இன்று நம்மானுள் வருமேல் அவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ!"

"பாம்பு கயிறாகக் கடல்கடைந்த மாயவன்
ஈங்கு நம்மானுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ!"

"கொல்லையஞ்சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லை நம்மானுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ!"

பின்னர்க் குரவையாடும் கன்னியர் எழுவரும் பிஞ்ஞைப் பிராட்டியார் கண்ணனோடு செய்த முல்லையாற்றில் ஆடிய திருவிளையாடல்களைப் பாடினர். மாதரி பசுநிறத்தினைத் தன் கையாழியால் மறைத்த மாயவனுக்கு இடப் பக்கத்திலும், மதியையொத்த திருமேனி கொண்ட பலதேவனுக்கு வலப் பக்கத்திலுமாக நின்று சிறு புறமாகிய பிடரியினைக் காட்டிக் குரவையோடும் பிஞ்ஞைப் பிராட்டியின் தாளை ஒற்றறுப்பெனத் தாங்கி, நாரதனார் யாழ் நரம்பினை உருவி வாசிக்கும் மாயவன் தன் முன்னவனாகிய பலதேவனோடும் பிஞ்ஞை முதலிய பெண்மணிகளுடனும் துவராபதியிலே தாதெரு மன்றத்திலே அன்றாடிய குரவைக் கூத்தினைக் கண்கூடாக்கும். இக்கூத்து எவ்வளவு அழகாய்க் காணப்படுகிறது!" என்று வியந்தாள். மேலும் அவள் ஆய்க்கன்னியாகளை நோக்கி 'தோழிகாள்! நாம் எல்லோரும் சேர்ந்து கருடப்புள்ளை யூர்கின்ற கடல் வண்ணன் பெருமைகளைப் பாடுவோம் என்று கூறி அவர்களோடு மாதரியும் ஐயையும் கலந்து பல பாட்டுக்களைப் பாடினார்கள்.





# சாங்கிய தரிசனம்

(திரு. எஸ். ஏ. திருமலைக் கொழுந்துப் பிள்ளை, பி.ஏ.)

## 52-வது காரிகை

***ந விநா பாவைர் லிங்கம் ந வி நாலிங்கேந பாவநிர் விருத்தி:—***

***லிங்காக்ய பாவாக்ய ஸ்தஸ்மாத்விவித: ப்ரவர்த்ததே ஸர்க்க:***

### இருவகைச் சிருட்டி

பாவங்கள் (எண்ணங்கள்) இல்லாத வழி, இலிங்கமும் இல்லையாம்; இலிங்கம் இல்லாத வழி பாவங்கள் முடிவு பெற மாட்டா (உருப்பட்டுத் தோன்ற மாட்டா.)

ஆதலின் சிருட்டி இரு விதமாக் கிளைவிடுகின்றது. ஒன்று இலிங்கத்திருந்தும் மற்றொன்று பாவங்களினின்றும் பிரவர்த்திக்கின்றது.

உரை:—எண்ணங்கள் இல்லாத வழி இலிங்கமுமில்லையாம் என்றது மனம் ஒலை மறின், பாவங்களை உருச் செய்யும் இலிங்கமும் (காரண சரீரமும்) பிரகிருதிக்குள் மறைந்து விடும் என்றபடி.

இலிங்கம் இல்லாத வழி எண்ணங்கள் உருப்பெற மாட்டா; ஆகவே இலிங்கம் மறைதலால் பிறவி அறும். இலிங்கம் மறைதற்கு எண்ணங்களை உதயமாகாது தடை செய்ய வேண்டும். பிறவிக் கடலைக் கடக்கும் உபாயம் எண்ணங்களின் ஈவும், அவற்றால் இலிங்கம் மறைதலுமாம்.

சிருட்டி இருவகை:—இலிங்கத்திருந்து பஞ்ச பூதங்கள் தோன்றி அதனைப் புலியை விட்டு நீங்காது பிணைத்தன. பாவங்களினின்று பிறவிகளுண்டாகின்றன. விதையினிடமிருந்து வேர் உண்டாகி அவ்வித்தை நிலத்தை விட்டோடாது பிணிக்கினும், அவ் வித்து விருக்ஷமாகிய தன் முடியிற் பின்னருந் தோன்றி வேறோர் விருக்ஷத்திற்குக் காரணமாகின்றது. புமானும் பஞ்சபூதத் தொடக்கை விடாது பிறவி எடுத்துழலுகின்றான் என்பதாம்.

பஞ்சபூத மயமான தனது தூல தேகத்தினின்றும் பஞ்ச பூதங்களைச் சிருட்டித்துக் கொண்டே அத் தூல தேகத்தின் வினைப்போகம் முடிதலும் தனது எண்ணத்தை இலிங்கத்திற் செலுத்தி மறு பிறவி யெய்துகின்றான் என்று தெளிக.

ஜன்மம் எவ்வாறு கைகூடுகின்றதெனின், புமான் நிமித்த காரணமாகிய அறிவன்; மனம் அவன் நினைத்தாங்கு ஒழுகவல்ல சித்சக்தி; இலிங்கம் அச்

சித்சக்தியேறி தேகத்தை வனைந்து தருதற்குரிய யந்திரம். புருஷன் குயவன், மனம் அவனது கை, இலிங்கம் அவனது தண்ட சக்கரம், பிரகிருதி மண்.

இனிப் பிறவி பேதங்களை யுணர்த்தலுற்றார்.

## 53-வது காரிகை

அஷ்டம் விகல்பம் தைவம் தைர்யக்யோனம் பஞ்சதாபவதி—
மானுஷ்யம் த்வே காவித் ஸமாச தோயம் திரிதாசர்க்கஃ

### பலவகைப் பிறவி.

தேவசரீரம் எட்டு வகைப்படும்; கீழ்நோக்க முடைய விலங்குகள் ஐவகைப்படும்; மனிதர் ஒரேவகை. இவற்றுள் சர்வஜீவ சிருஷ்டியும் அடக்கம்.

உரை:—தேவர்கள் (மேனோக்க முடையவர்கள்) எட்டு வகையினர்:—விரிஞ்சன், பிரஜாபதி, பிதுர் (சந்திரன்,) இந்திரன், கந்தர்வன், யக்ஷன், ராக்ஷதன், பிசாசு.

கீழ் நோக்க முடைய விலங்கினம் ஐந்து வகைத்து:—பசு, மிருகம், பக்ஷி, ஊர்வன, தாவரம்.

மனிதன்; ஆகச் சீவராசிகள் பதினொன்கு வகையின.

விரிஞ்சன் பிரமாண்டத்தைச் சரீரமாக வுடையவன். பிரஜாபதிகள் மனு, இருடி முதலியோர்.

பிதுர்க்கள் சந்திரலோக வாசிகள் இந்திரன் இந்திரிய சுகத்தை முழு முற்றுங் கண்டுகளித்து மற்றைய தேவர்களுக்குத் தலைவனு யிருப்பவன். கந்தர்வர் தேவேந்திரனது பணிவிடை புரிவோர். யக்ஷர் குபேரனது வேலைக்காரர். இராக்ஷதர் தேவ விரோதிகள். பிசாசர் சுயேச்சையாய்த் திரியும் ஓர் ஜாதி.

"பசு என்பது ஆமுதல் எலி வரையுள்ள ஜீவராசிகளை யுணர்த்தும். மிருகம் என்பது சிங்கம முதற்கொண்டு நரி வரையுள்ள ஜீவ பேதங்களை யுணர்த்தும். தாவரம் பாரிஜாத முதற்கொண்டு புல் வரையுள்ள ஜீவ பேதங்களை யுணர்த்தும்" (தத்துவ சமாசம்)

இனி ஜீவராசிகளின் இயல்பினைக் குறிக்கலுற்றார்.

## 54-வது காரிகை

ஊர்த்வம் சத்வ விசாலஸ்தமோ விசாலஸ்ச்ச மூல தஸ்ஸர்க்கஃ—
மத்யேரஜோ விசாலோ பிரம்மாதி ஸ்தம்ப பர்யந்தம்.

மாயா விருக்ஷமாகிய இப் பிரபஞ்சத்தின் உச்சியி லிருப்போர்க்கு சத்துவமாகிய ஒளி மிகுந்திருக்கும், மூலத்திருப்போர்க்கு இருளாகிய தமம் மிகுந்திருக்கும்; மத்தியி லிருப்போர்க்கு இயக்க ரூபமான இராஜம் மிகுந்திருக்கும். இவ்விதி பிரமன்முதல் ஸ்தம்பம் பரியந்தம் ஏற்புடைத்து.

உரை:—தேவர்கள் இப் பிரபஞ்சத்தின் முடியில் வசித்திருப்பர்;

விலங்குகள் இப் பிரபஞ்சத்தின் மூலத்தினிடம் வசிக்கின்றன. மனிதர் மத்திய தானத்தில் வசிக்கின்றனர்.

அன்றியும் ஒவ்வொரு ஜீவராசியையும் நோக்கினும் மூலத்தானமாகிய கடிபாகத்தில் இருளும், நடுத்தானமாகிய நெஞ்சு புயம் முதலியவற்றிற் பலமும், உச்சித்தானமாகிய சிரசில் அறிவுப் பிரகாசமும் காணப்படும். இவ்விதி பிரமன் முதல் புல்வரை யமைந்துளது.

தேவலோகமாகிய மேலுலகில் மிக்க ஒளியும், அந்தரிக்ஷமாகிய நடுவுலகில் இயக்க ரூபமான காற்றும், பூலோகமாகிய கீழுலகில் கனமயமான இருளும் உள. ஒருவன் மலையிலேறி அங்கு தியானம் செய்யின், அதிசுலபமாய் அறிவிற்கு விளக்கங் காண்பன். இது பற்றியே சிலர் மலையிலேயே தவசிகளாய் வசிக்கின்றனர்.

பக்ஷி ஜாலங்களாலும் எட்டாத் தானத்தில் சத்துவம் மிகவும் விசாலம், பக்ஷி ஜாலங்கள் பரவுந்தானத்தில் இராஜோ குணம் விசாலம், பூமியை விட்டு மேற் செல்ல மாட்டாத விலங்குகளிடத்து தமோகுணம் விசாலம்.

## 55-வது காரிகை

*தத்ராஜார மரணக்கிருதம் துக்கம் பிராப்னோதி சேதனப்புருஷ:—*
*லிங்கஸ்யா விநிவிருத்தே ஸ்தஸ்மாத் துக்கம் ஸ்வபாவேண,*

அவ்விடத்து (திரிலோகமாகிய பிரபஞ்சத்தில்) அறிவனாகிய புருஷன் பிறப்பு இறப்பாகிய கிருத்தியங்களால் அடிபட்டுத் துன்பத்தை யடைகின்றான். இலிங்கத்தை விட்டு நிவிர்த்தி பெறின் துன்பம் ஒழியும். இலிங்கத் தொடர்பு விடாதவரை துன்பம் இயற்கையாகவே அமைந்திருக்கும்.

உரை:—இலிங்க சையோகமே துன்பத்திற்குக் காரணம். ஆகலின் புருஷன் தன்னை இலிங்கமாகிய காரண தேகக் கட்டினின்று விடுபட வேண்டும். இதுவே விடுதலை மார்க்கம். (வீட்டு நெறி.) இவ்வுபாயத்தை எவ்வாறு அறிவதெனின், கூறுதும்:—

தமிழுலகத்தைக் கடைத்தேற்றத் திருவுளங் கருதிச் சிவபெருமான் அனுப்பிய திருமூலர்,

"அவிழ்க்கின்ற வாறும் அது கட்டுமாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் செல்கின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் லெனு மிவ்விரண்டும்
உணர்த்தும் அவனை யுணரலு மாமே."

என்றருளினர்.

ஆதலின் முத்திக்கரை யேறுதற்கண் ஆத்திரம் மிகுந்தவர் தமிழ், ஆரியம் ஆகிய இரு மொழிகளின் இரகசியத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஆத்துமா தன்னை யவிழ்க்க முடியாவண்ணம் கட்டுப்பட்டிருக்கும் முடிச்சைக் கண்டு, அதனை அவிழ்க்கும் தந்திரத்தையும், பிரபஞ்சத்தில் விளையாட எண்ணங்கொள்ளின், எவ்வாறு தன்னை இலிங்கத்தோடு கூட்டி முடிய

வேண்டும் என்னும் தந்திரத்தையும், அவ்வாறு முடிச்சின்கண் மாட்டிக் கொண்ட பின் எவ்வாறு ஒரு கூட்டில் வாசஞ்செய்து மரணகாலத்தி லனு வாய்ச் சென்று மற்றொரு கூட்டின் வித்தைத்தொட்டு அதனைக் கூடாக வனைந்து அதன்கண் வாழ்ந்து வினைமுடிவில் அதனைவிட்டு அகன்று இவ்வாறு ஜனனமரணச் சுழற்கண் அலமருந் தந்திரமும் தமிழ்ச்சொற்கண்ணும் பூட்டிட்டிருக்கின்றன. ஆதலின் அருள் வலியால் அம்மொழிகளினுடைய தந்திரத்தை (வாக்குவாணியை)ப் பெறின் பந்தம், மோக்ஷம், சம்சாரம் ஆகிய மூன்றின் மெய் இரகசியந் தோன்றும். அதுவன்றியும் இம்மொழிகட்கு நாயகனாகி நின்று பிரபஞ்சமென்னும் தேரைத் தனது அருட்சத்தியால் கட்டிமுடித்துப் பின்னர் அதனை அவிழ்த்து வெட்டவெளி யாக்குதலை ஓர் விளையாட்டாகக் கொள்ளும் பரமதந்திரியாகிய அவனையும் (அச்சிவ பெருமானையும்) அறிதலுங் கூடும்.

மாணிக்கவாசகப் பெருமானும் "படைத்தும், காத்தும், கரந்தும் விளையாடி" என்றும், "ஐயா நீ யாட்கொண்டருளும் விளையாட்டில், உய்வார்கள் உய்யும் வகை யெல்லாம் உய்ந்தொழிந்தோம், எய்யாமற் காப்பாய் இனியேலோ ரெம்பாவாய்" என்று அருளினர்.

"இரண்டாங்கட் டவிழ்த்தால் தெரியும்" என்றோர் முதுமொழியுமுளது. மேற்கட்டாகிய முதற்கட்டை யமன் ஒவ்வொருவருக்கும் மரண காலத்தில் அவிழ்த்து விடுகின்றான். மற்றோர் ஜன்மம் எடுக்குமுன் இந்த முதற்கட்டு முற்றும்விட்டு புருஷன் அணுவாகி இலிங்க தேகத்தொடக்கு அறாது ஆசையா லுந்தப்பட்டுத் தனதாசைக்கு உகந்த தேகத்தை வனைதற்கு நிற்பான். ஆசை விடுபட்டு ஞானமும் நிலைபெறின் இலிங்கத்தினின்றும் கட்டவிழ்த்து ஓடிப் பரஞ்சோதியோடு கூடிச் சச்சிதானந்தப் பேற்றை வகிப்பன். ஜன்மதந்திரம் பிரகதாரண்ணிய உபநிடதத்தின் கண் நன்கு விளக்கப் பட்டுளது.

இலிங்க சையோகம் பரமபந்தம். ஜனனத்தாலும் மரணத்தாலும் முறையே மேற்கட்டாகிய தேகமும், அம்மேற்கட்டின் நிவிர்த்தியும் நேர்கின்றன. ஆயினும் உள்கட்டை யவிழ்த்தாலன்றி முத்தி கைகூடாது.

துன்பம் என்பது சுத்தஆன்மாவிற்குக் கிடையாது; ஆயினும் தான் தொடக்குண்ட இலிங்கத்தில் துன்பங்கள் சேர்வதை ஆன்மா அறிகின்றது. இவ்வித உணர்ச்சியே துன்பம் இலிங்கத்தினின்றும் ஆன்மா தொடக்கறின் துன்பம் நிவிர்த்தியாம்; துன்பம் ஸ்தம்பித்துப்போம்.

"ஜனன மரணாதிகளால் விளைகின்ற துக்கம் எவற்றிற்கும் சமமே" (கபில சூத்திரம்.)

"பிரமன் முதல் தாவரம் வரை தேவலோகமானாலும், பாதலமானாலும் ஆங்காங்குள்ள ஜீவராசிகட்கும் துக்கம் பொதுவாய் ஏற்பட்டுளது."

சாங்கியப் பிரவசன பாஷ்யம்

"விருத்திக்குக் காரணமாகிய சூத்திரத்தால் படிப்படியாய ஜன்மங்கள் விளைதலின் அஃது வெறுக்கத்தக்கது."

சூத்திரம்=இலிங்கம் (கபில சூத்திரம்.)

[இனி இப் பிரபஞ்சம் பிரவிர்த்தித்துக் கொண்டிருப்பதன் காரணத்தைக் கூறுவர்.]

## 56-வது காரிகை

இத்யேஷ பிரகிருதிகிருதோ மஹதாதி விசேஷ பூதபர்யந்தஃ—
பிரதிபுருஷ விமோக்ஷார்த்தம் ஸ்வார்த்த இவபரார்த்தம் ஆரம்பஃ

மாயையாகிய பிரகிருதி இவ்வாறு புத்தி (மகத்) முதற்கொண்டு விசேஷ பூதங்களாகிய (மண், நீர், தீ, காற்று, ஆகாயம்) வரை தொழிற்பட்டு வினைபுரிவதெல்லாங்கூடி ஒவ்வொரு புருஷனையும் தனித்தனி கடைத்தேற்றற் பொருட்டே (விடுவித்து முத்திக் கரை சேர்த்தற் பொருட்டே) ஆயினும் பிரகிருதி சுயநயங்கருதிப் பணிபுரிபவளை யொப்ப ஒழுகுகின்றது.

உரை. வாசஸ்பதி (ஓர் வங்காள நாட்டுப் பண்டிதர்) கூறுகின்றார்:—"பிரகிருதி செய்யும் இப் பணிவிடை தன் பொருட்டே யாயினுமாகுக, பிறிதின் பொருட்டே யாயினுமாகுக. அறிவுடைய பொருளன்றே சாதுரியமான பணி முடிக்கவல்லது. பிரகிருதிக்குச் சுயவறிவில்லாததால் அது தானே பிரவர்த்திக்க வியலாது. ஆதலின் அதனைப் பணிகொள்ளும் அறிவொன்றுளது. பந்தமுற்ற புருஷர்களுக்கோ அறிவிருந்தும் பிரகிருதியது இரகசியத்தைத் தெரிந்து கொள்ள மாட்டாமையால் அவர்கள் பிரகிருதியைப் பணி கொள்வதாக ஏற்படாது. ஆதலின் முற்றறிவுடைய ஒருவன் உளன். அவனே பிரகிருதியை நடத்துபவன். அவனே யாவராலுந் தொழத்தகும் ஈசன்; அவனே கடவுள்."

விசேஷ பூதங்கள் என்பன எஞ்சி வெளிப்பட்டுத் தோன்றிய தூல பூதங்கள்.

கபிலன் ஈசன் ஒருவன் உளன் என்பதனை ஓர் காரணம்பற்றி மறைத்துப் பிரகிருதிக்குச் சுயகிருத்தியம் கற்பியா நின்றான் (உளதெனக் கூறினன்). சுதந்தரமும் தன்னறிவும் படையாத பிரகிருதி எவ்வாறு பிறர் நன்மையை நாடி நடித்துப் பயன்தரவல்லது. ஆதலின் யாவற்றையும் உள்ளவாறு கண்டு பிரகிருதிக்கு அப்பால் நின்றதனைப் பணிகொள்ளும் சிவன் ஒருவன் உளன்; வண்டியை இழுத்துக்கொண்டு ஓடுவது மாடேயாயினும் அதனைப் போன போக்கில் நினைத்தவிடத்திற்கு ஓட்டும் ஒருவன் உளனன்றே!

அதனைப்போல் புருஷரைத் தாங்கி யோடாநின்ற மாயை என்னும் மரக்கலத்தைத் துறைக்கண்கொண்டு சேர்க்கும் ஒருவனுளன். மாயையை ஆட்கொண்டு அதன் ஆற்றலின் முடிவைப் பன்முறை கண்டதன்றியும், மற்றும் புதிதாய்க் காண்பதுபோல் நடிக்கும் சிறுவன் ஒருவன் உளன். இது பற்றியன்றே அவனை,

"முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனே"

என்று மாணிக்கவாசக அடிகள் கூறியருளினர்.

[சுய அறிவில்லா மாயை எவ்வாறு ஆன்மாக்களுக்குத் தக்காங்கு ஒழுகுகின்றது எனின்.] (தொடரும்.)

# விசித்திர விநோதம்

ஓர் சப் மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பெழுதத் திறமையற்றவரா யிருந்ததால், சப் ரிஜிஸ்ட்ராராக மாற்றப்பட்டார். ஓர்நாள் தன் மனைவியின்மேல் கோபங் கொண்டு,

"ஏண்டி! புத்திகெட்டவளே! உனக்கு அறிவு இல்லையா?

மனைவி:—தங்களைப்போல் இழந்து விடவில்லை. காகிதத்தின் முன்புறத்தில் எழுத சாமார்த்திய மில்லே! பின்னாலே எழுதற உத்தியோகம் வந்துட்டுது! பொம்மனாட்டியைத்தானே வந்து வெரட்டலாம்!

* * * *



சுந்தரி:—"கஷ்டத்தாலும் துக்கத்தாலும் என் அழகியகூந்தல்கள் கொட்டி விட்டன."

ராமன்:—"புடவைக்காகவும், நகைக்காகவும் கொடுக்கவேண்டிய பாக்கியாலும் என் தலைமயிர் நரைத்து விட்டன."

* * *

உபாத்தியார்:—அ[illegible]ங்களில் நீந்தத் தெரியாதவர்களை நான் ஆற்றிற்கு அழைத்துக் கொண்டு போய், நீச்சல் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது ஒரு முதலை வந்து என்னை உள்ளே யிழுத்துக்கொண்டு போய்விட்டால், நீங்கள் என்ன செய்வீர்கள்?

பையன்கள்:—நாங்கள் உடனே ஸ்கூலுக்கு ஓடிவந்து, இன்றைக்கு ஸ்கூலுக்கு லீவ் என்று மற்ற பசங்களுக்கெல்லாம் சொல்லுவோம் சார்.

* * * *

கிராமத்தில் குடிவந்த ஒரு கனவானின் மனைவி இறந்த பொழுது சவத்தை அடக்கம் செய்ய அவ்வூர் வாசிகள் அவருக்கு மிகுந்த உதவி செய்தனர். அவர்களுக்கு வந்தனம் கூறுகையில் அவர் கூறியதாவது, "எனக்கு உதவி செய்த உங்களுக்கு இதுமாதிரி சந்தர்ப்பம் ஏற்படுகையில் என் பூரண உதவி யளிக்கக் காத்திருக்கிறேன். உங்கள் ஒவ்வொருவருக்கும் உதவியளிக்க இதுபோல் ஒரு சந்தர்ப்பம் வரவேண்டுமென கடவுளைத் துதிக்கிறேன்."

அவ்வூர் வாசிகளுக்கு ஏன் தன்மீது கோபம் வந்தது என்று அவருக்கு விளங்கவில்லை.

அவர் :—" கண்ணே ஓர் முத்தம்..."

அவள்:—"எனக்கு பணம இப்போ வேண்டியதில்லை."

*   *   *

பிரசங்கியார்:-"நான் இன்று மடையர்களுக்கன்றோ பிரசங்கம் செய்தேன். எதுமறியாத மூட்டாள்கள்!"

பிரசங்கம் கேட்டவர் :—"அப்படியானால் தாங்கள் பிரசங்கம் செய்கையில், அவர்களை அடுத்து, அடுத்து, என் பிரியமுள்ள சகோதரர்களே என்று சொன்னதேன்?"

*   *   *   *

புருஷன்:-அடியே, ஆணாய்ப் பிறந்தவன் எப்படி யிருக்கவேண்டும்.

மனைவி:—தெருவில் சண்டை யென்றால் வீட்டில் ஓடிவந்து புகுந்து கொள்ளும் தங்களைப்போல் இருக்கவேண்டும்?

*   *   *   *



ஒரு மனிதன் :—" என்னை இதற்கு முன் பார்த்திருக்கிறீர்க ளில்லையா ஸார்?"

கனவான் :—"இருக்கலாம். ஒருமுறை கீழ்ப்பாக்கம்(பைத்தியக்கார) ஆஸ்பத்திரிக்கு விஜயஞ் செய்திருக்கிறேன்."

*   *   *

டாக்டர் :—நீங்கள்தானே என்னை டெலிபோன் வழியாக 244-ம் நெ வீட்டிற்கு வரும்படி அழைத்தீர்கள்? யாருக்கு உடம்பு அசௌக்கியம்?

வீட்டிற்காரர் :—(கையில் கடிகாரத்துடன்) தற்சமயம் எல்லோரும் சௌக்கியமே. எனது வீட்டில் யாருக்காவது திடீரென்று வியாதி வந்தால் தாங்கள் இங்கு வர எவ்வளவு நேரமாகுமென்பதைத் தெரிந்து கொள்ளவே உம்மை இப்பொழுது வரவழைத்தேன். நீங்கள் இம்முறை $5\frac{1}{4}$-நிமிஷத்தில் வந்து விட்டீர்கள். மிகவும் சந்தோஷம்.




**சினிமா கட்டணத்துக்கு மீன்.**

அளங்கா என்னுமிடத்தில் எஸ்கிமோ ஜாதியார் சினிமா படக் காட்சியைப் பார்ப்பதற்குச் செலுத்தவேண்டிய கட்டணத்துக்குக் காசுக்குப் பதிலாக மீன்களைத் தருகிறார்களாம்.

***

**30 லட்சம் பவுன் மதிப்புள்ள பக்கிங்காம் அரண்மனை.**

பக்கிங்காம் அரண்மனை ஸ்தலம் 30 லட்சம் பவுன் மதிப்புள்ளதாகவும், அதனுள்ளிருக்கும் தங்கத்தட்டு 20 லட்சம் பவுன் மதிப்புள்ளதாகவுங் கருதப்படுகிறது.

***

**நிறமாறும் சீன மலர்.**

சீனாவில் ஒருவித மலரிருக்கிறது. அது இரவிலும் நிழலிலும் வெள்ளையாகவும், சூரிய வெளிச்சத்தில் சிகப்பாகவும் மாறுகிறதாம்.

***

**6000 பவுன் பெறுமான பூட்ஸ் போடும் மனிதர்.**

ஸர். வால்டர் ராலீ என்பார் 6000 பவுன் பெறுமானமுள்ள பூட்ஸ்களை உபயோகித்து வந்தாராம்.

***

**மணிகாட்டும் நட்சத்திரம்.**

கிரீன்விச் என்னுமிடத்தில் ஒரு நட்சத்திரத்தைக் கொண்டு மணிக் கணக்கை நிர்ணயிக்கிறார்களாம். அந்நட்சத்திரம் 24 மணிக்கொருமுறை நேர் தெறகே வருகிறதாம்.

***

**86 அடி சுற்றளவும், 21 அடி உயரமுமுள்ள மணி.**

மாஸ்கோ நகரில் ஒரு மணியிருக்கிறது. அதன் சுற்றளவு 86 அடியும், உயரம் 21 அடியும் கனம் 217 டன்னும் இருக்கிறதாம். உலகிலேயே இதுதான் பெரிய மணியாம்.

***

**எலி ரோமத்தாலான 'கோட்'**

சமீபத்தில் லண்டன் பளிங்கு மாளிகையில் கண்காட்சியொன்று நடைபெற்றது. அதில், 'பவாஸ்' என்ற பெண்மணி 400 எலிகளின் உரோமங்களால் ஆகிய 'கோட்' ஒன்றை அணிந்திருந்தார்.

***

**உலகெங்கும் $3\frac{1}{2}$ கோடி மோட்டார்கார்கள்.**

தற்காலம் உலகெங்கும் $3\frac{1}{2}$ கோடி மோட்டார்கார்கள் ஓடுகின்றனவாம்.




ஜெர்மனி தேசத்தில் நூற்றெட்டு கோடீஸ்வரர்கள் இருக்கிறார்கள்.

*   *   *   *

நம் இந்தியாவில் ரயில் பாதை 43,000 மைல் தூரம் போடப்பட்டிருக்கிறது.

*   *   *   *

ஜெர்மனியில் தற்போதிருக்கும் ஜனங்களின் எண்ணிக்கை 6 கோடியே 70 லட்சம் இருக்கிறதாம்.

*   *   *   *

பிரிட்டிஷாரைவிட அமெரிக்கர்கள்தான் டெலிபோனை அதிகமாக உபயோகிக்கிறார்களாம்.

*   *   *   *

ரஷிய விஞ்ஞானிகள் ஆண்களுடைய மூளையைவிட பெண்களுடைய மூளை சிறந்து விளங்குகிறது எனச் சிலர் கூறுங் கொள்கைக்கு ஆதாரமேயில்லையெனக் கூறுகின்றனர்.

*   *   *   *

கிரேட் பிரிட்டனில் பிரசவங் காரணமாக எவ்வளவு மகளிர் மரிக்கிறார்களோ, அதைவிட நான்கு மடங்கு பெண்கள் நம் நாட்டில் மரணமடைகிறார்கள்.

*   *   *   *

நியூஸிலந்தில் மகளிர் பிரசவத்தால் இறப்பது கிடையாது; ஆலந்திலே சிசு மரணமே கிடையாது எனக் கூறப்படுகிறது.

*   *   *   *

ஒரு வருஷத்தில் 117,500,000 அமெரிக்கர்கள் 30,000,000 மோட்டார்களில் 200,000,000,000 மைல் தூரம் பிரயாணஞ் செய்கின்றனராம்.

*   *   *   *

ஒரு டன் நிலக்கரியிலிருந்து 10,000 கன அடி வாயு உண்டாகிறதாம்.

*   *   *   *

சீன தேசத்தில் 100-க்கு 98 பேருக்கு எழுதப் படிக்கத் தெரியாதாம்.

*   *   *   *

லண்டனில் 112,000 மோட்டார் சைகில்களும், 250,000 மோட்டார்களும், 91,000 மோட்டார் லாரிகளும், இருக்கின்றனவாம்.

*   *   *   *

துப்பாக்கிக் குண்டு மணிக்கு 1000 மைல் வீதம் செல்லுமாம்.

*   *   *

உலகில் 600 அல்லது 700 எரி மலைகளே இருக்கின்றனவாம். அவற்றில் 270 எரி மலைகள் இன்னமும் எரியுந்தன்மையுடையனவா யிருக்கின்றனவாம்.

# ஆசிரியர் குறிப்புக்கள்

## எட்வர்ட் மன்னரின் தியாகம்

பிரிட்டன், அயர்லாந்து, இதர குடியேற்ற நாடுகள் இவற்றிற்கு அரசராகவும், இந்தியாவுக்குச் சக்ரவர்த்தியாகவும் இருந்து உலகிலேயே பெரிய வல்லரசாகிய பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் மன்னர் என்னும் அந்தஸ்தில் முடிதாங்கி வீற்றிருக்கும் கௌரவம் சாமான்யமானதா? அப்படிப்பட்ட மகத்தான ஒரு அந்தஸ்தை ஒரு கொள்கைக்காக துறப்பதென்றால் அது ஒரு பெரிய தியாகமேயாகும். அத்தகைய தியாகத்தைச் செய்து உலக மக்களின் பார்வையில் உயரிய மதிப்பைப் பெற்றுள்ளவர் நமது எட்டாம் எட்வர்ட் மன்னரேயாவார். அவர் தமது தந்தையின் மரணத்துக்குப் பின்னர் அரசராக வந்தார். ஆனால் இன்னமும் முடிசூட்டுவிழா நடைபெறவில்லை. இதற்குள் அவர் ராஜ்யாதிகாரத்தையே துறந்துவிட்டு நாட்டைவிட்டு வெளியேற வேண்டிய சந்தர்ப்பம் வாய்ந்தது துரதிர்ஷ்டமேயாகும். ஆனால் இதனால் வருத்தப்படுபவர்கள் பிரஜைகளும் மற்றவர்களுமேயொழிய மன்னர் மனஉறுதியுடன் இருப்பது கவனிக்கத்தக்கது. எட்வர்ட் மன்னர் ஸ்ரீமதி. சிம்ஸன் என்னும் ஒரு மாதைக் காதலித்தார். அவரை மணந்துகொள்ள பார்லிமெண்டும், மந்திரிசபையும் அனுமதிக்கவில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் கௌரவம், பார்லிமெண்டின் சம்பிரதாயம் என்னும் இவற்றின் பேரால் அரசர் தமது இஷ்டப்படி நடந்து கொள்வதினின்றும் தடுக்கப்பட்டார். அவர் பற்பல நிபந்தனைகளுக்கிடையிலும் சிம்மாசனத்தில் வீற்றிருப்பது பெருமை என்று கருதியிருந்தால் தம் கொள்கையை விட்டுக் கொடுத்திருப்பார். ஆனால் அவர் ஜனநாயகக் கொள்கையும் மன உறுதியும் சுயேச்சை உணர்ச்சியும் உடையவர். மேலும் பட்டத்தைத் தாம் வகித்தாலும் ஒன்றுதான்; தமது சகோதரர்கள் வகித்தாலும் ஒன்றுதான் என்று கருதக்கூடிய விரிந்த மனோபாவமுடையவர். ஆதலின் தன் தம்பியே நாட்டை ஆளட்டுமென்றும், தாம் தமது கொள்கைக்காகத் தியாகம் செய்யலாமென்றும் துணிந்துவிட்டார். அவர் இவ்வாறு செய்ய நேர்ந்ததற்காக வருத்தப்படாமல் இல்லை, ஆனால் வேறு வழியில் நடந்து கொண்டிருந்தால் தமது கடமையைச் சரிவர நடத்த முடியாதென்று அவர் உணர்ந்தார். அதுபோலவே மந்திரி சபையினரும் மற்ற அன்பர்களும் மன்னரின் பட்டத் துறவைக் கண்டு அதிக வருத்தப்படுகின்றார்கள். அவர்களால் முடிந்திருக்குமாயின் மன்னருக்குத் தக்கபடி உதவிசெய்ய அவர்களும் முன் வந்திருப்பார்கள். ஆயினும் சம்பிரதாயத்தையும் இதர பழக்க வழக்கங்களையும் திடீரென்று மீறி விடமுடியுமா? ஆதலின் அப்போது நடந்ததெல்லாம் இறைவன் திருவிளையாடலே என்று கொண்டு எவர்மீதும் குற்றம் காணாமல் இருப்பதே நலமாகும். எனினும் எட்வர்ட்மன்னர் சொற்ப காலத்திற்குள் பிரஜைகளின் அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரரானார் இனியும் அவர் உலகமக்கள் பார்வையில் பேரும் புகழுடனும் விளங்குவாரென்று நம்புகிறோம். இப்போது ஆறாவது ஜார்ஜ் சக்ரவர்த்தியாக வந்துள்ள யார்க் கோமகனும் எதிர்பாராத வகையில் பெரிய அந்தஸ்தை அடைந்திருப்பதால் அதைச் சரியான வழியில் பயன்படுத்திக்கொண்டு பிரஜைகளிடமும் பார்லி

மெண்ட் சபையினிடமும் நன்மதிப்புப் பெறுவார் என்று ஆவலுடன் எதிர் பார்க்கிறோம்.

---

## பிரிட்டிஷ் மந்திரி எச்சரிக்கை

இன்றைய உலகம் விஞ்ஞான சாஸ்திர ஞானம் காரணமாக ஏற்படும் அனுகூலங்களையும் பிரதிகூலங்களையும் அனுபவிக்கும் நிலைமையில் இருக்கின்றது. அதன் பலனாக ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் உள்ள தூரம் வர வர வேகமாகக் குறைகிறது. ஆதலால் பிரிட்டிஷ் வெளிநாட்டுமந்திரி ஸ்ரீ ஈடன் கூறுவதேபோல் உலகில் ஏதேனும் ஒரு மூலையில் ஒரு சிறு பொறி கிளம்பினாலும் அது உடனே பெருந் தீயாகி உலகம் முழுதும் பரவிவிடும். ஆதலால் உலகத்திலுள்ள அனைவருமே மிக்க ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும். ஒரு பிரதேசத்தில் நடக்கும் நிகழ்ச்சிக்கும் மற்றொரு பிரதேசத்துக்கும் சம்பந்தமில்லை என்று கருதலாகாது இதனால்தான் நமது தலைவர் பண்டித ஜவஹர்லாலும் நமது பிரச்னையும் உலக பிரச்னையின் ஒரு பகுதிதானென்றும், உலக நிலைமையைக் கவனித்தே நாமும் நமது போராட்டத்தை நடத்த வேண்டுமென்றும் அடிக்கடி வற்புறுத்துகிறார். இதையே ஸ்ரீ. ஈடனும் தமது தேசத்தினருக்குக் கூறுகிறார். அவர் சமீபத்தில் பிராட் போர்ட் என்னுமிடத்தில் பேசுகையில் செய்த எச்சரிக்கையை உலகத்தார் அனைவருமே கவனித்தல் அவசியமாகும். முதலாவதாக அவர் பலவிதமான கொள்கைகளையுடைய கட்சிகளை ஏற்படுத்திக்கொண்டு உலகத்தைப் பிளவு படுத்தக்கூடாது என்கிறார். உலகில் நிலையான சமாதானம் ஏற்பட வேண்டுமாயின் தேசங்கள் ஆயுதப் பெருக்குப் போட்டியை விடுத்து பொருளாதார ஒத்துழைப்பில் கவனம் செலுத்தவேண்டுமென்பது அவரது அபிப்பிராயம். ஆயுதப் பிரச்னை உள்பட எல்லாப் பிரச்னைகளிலும் ஒரு சமரச ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமென்றும் அதை உண்டாக்குவதற்குத் தம்மாலானதையெல்லாம் செய்வதாகவும் கூறுகிறார். உண்மையே; எல்லா தேசங்களும் சண்டைல் எண்ணத்தைவிட்டு, உண்மையிலேயே உலக சமாதானத்தை நிலைநிறுத்த வேண்டுமென்னும் ஆவலுடன் ஆயுதப்பெருக்கு வேலையைவிட்டுப் பொருளாதார ஒத்துழைப்பில் ஈடுபடுமாயின் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் இவ்வளவு எச்சரிக்கை செய்யும் பிரிட்டிஷ் மந்திரி தம்முடையதைப் போன்ற வல்லரசுகளையும், சுதந்தர நாடுகளையும் மனதில் கொண்டு பேசுகிறாரே யொழிய இந்தியாவைப் போன்ற சுதந்தரமற்ற நாடுகளைப்பற்றி அவர் கவலை கொண்டதாகத் தெரியவில்லை. அவரே தமது பிரசங்கத்தில் 'உலக அரசியலில் தற்போது ஓங்கியிருக்கும் சில வேலை முறைகள் அடியோடு மாறவேண்டும்' என்று கூறியிருக்கிறார். அதை அவர் இந்தியா விஷயத்தில் உபயோகப்படுத்துவாரானால் மிக நன்றாக இருக்கும். சண்டைப் படுவதற்கான அந்தஸ்தில் ஒரு தேசம் இருக்கும் வரையில் உலக சமாதானம் ஏற்படுமென்று நாம் கருதவில்லை. உலகிலுள்ள எல்லா தேசத்தினருமே பிறரால் சுரண்டப் படாதவர்களாகவும் நிம்மதியான வாழ்க்கையை அனுபவிப்பவர்களாகவும் இருக்க வேண்டியது. உலக சமாதானத்திற்கு அவசியமாகும் என்பதையும், அதற்கேற்றபடி பிரிட்டிஷ் சர்க்கார் நடந்துகொள்ள வேண்டுமென்பதையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்.

---

## குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு

ஒரு விஷயத்தில் ராஜப் பிரதிநிதி லார்ட் லின்லித்கோவும், காங்கிரஸ் பிரதிநிதி சர்தார் படேலும் ஒருமித்த அபிப்பிராய முடையவர்களா யிருப்பது கவனிக்கத் தக்கதாகும் அப்படிப்பட்ட ஒரேவித மனோபாவம் ஏற்பட்டதும் சிலாகிக்கத்தக்கதே. ஆனால் சர்தார் படேல் அதிகாரத்தில் இல்லை. அவர் கூட்டங்களில் பேசலாம்; மக்கள் மனதை மாற்ற முயற்சிக்கலாம்; அவ்வளவுதான். ஆனால் வைசிராய் அதிகாரத்துடன் விளங்குகிறார் அவர் சொல்வதைச் செய்து காட்டலாம். ஆகலின் இந்த விஷயத்தையாவது சர்தார் படேல் பிரசாரம் செய்வதென்றும், வைசிராய் அமலில் கொண்டு வருவதென்றும் வைத்துக் கொண்டால் நம் நாட்டுக்கு விரைவில் விமோசனம் ஏற்படும். அப்படிப்பட்ட விஷயம என்ன? குடிசைத் தொழில்களுக்கு ஆதரவு அளிப்பது என்பதேயாகும சர்தார் படேல் டிசம்பர் மாதம் 14-ந் தேதியன்று சென்னை காங்கிரஸ் மண்டபத்தில் சுதேசி, கதர் பொருட்காட்சியைத் திறந்து வைத்தபோது, பெருவாரியான உற்பத்தி பெருவாரியான நாசத்திலேயே கொண்டுபோய் விடுமென்றும் ஆதலால் கதர் இயக்கம் போன்ற குடிசைத் தொழில்களை ஆதரித்தால் ஏழைமக்கள், அதிலும் விவசாயிகள் சுகத்தை யடைவார்களென்றும், கூறினார். அதற்கடுத்தநாள் லக்ஷ்மணபுரியில் விவசாயத் தொழில் பொருட்காட்சியைத் திறந்துவைத்த வைசிராய், 'சிறு தொழில்களையும் குடிசைத் தொழில்களையும் நாம் ஆதரிக்க வேண்டும். நம் கையிலுள்ள வசதிகளையும் ஆட்களையும் கொண்டு குடிசைத் தொழில்களைக் கூடியவரையில் பெருக்குவது நன்மை பயக்குமென்றே நான் கருதுகிறேன். வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்திருக்கும்போது குடிசைத்தொழில் பலருக்கு வேலை கொடுக்கக் கூடியதாக இருக்கும்' என்று கூறியது பாராட்டத் தக்கதேயாகும். இப்போது நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகமாகத்தான் இருக்கிறது. விவசாயிகள் தக்க வரும்படி இல்லாமல் கடன் பளுவில் சிக்கிக்கொண்டு அவஸ்தைப் படுகின்றனர். வைசிராய் கூறுவதுபோல சிறு தொழில்கள் மார்க்கெட்டிங் வசதிகளும், பணமுமில்லாமல் கஷ்டப்படுவதால் அந்த இரு வசதிகளையும் வைசிராய் செய்து கொடுக்க முயல்வார் என்று நம்புகிறோம் மேலும் கதர் இயக்கம் ஏழைகளுக்குப் பல வகையிலும் உதவியளித்து வருகிறதென்பதில் ஆக்ஷேபமில்லை. ஆகவே அதை எல்லா சர்க்கார் ஊழியர்களுக்கும் வழங்க ஏற்பாடு செய்வாரானால் அந்த இயக்கம் அபிவிருத்தியடைந்து அதனாலும் விவசாயிகளுக்குச் சௌகரியம் ஏற்படும். மேலும் விவசாயிகளின் விமோசனத்தில் இவ்வளவு அக்கறை கொண்டுள்ள நமது வைசிராய், அவர்களுடைய வரிப்பளுவையும் கடன் சுமையையும் பரிகரித்தாரானால் அதுவே பெரிய உபகாரமாக இருக்கும் என்பது எமது கருத்து.

---

## வான்கோழியின் பொல்லாச் சிறகு

மயிலானது தன்னுடைய அழகிய தோகையை விரித்துப் பார்ப்பவர் மனம் களிக்கும்படி ஆடிக்கொண்டிருக்கும்போது, அதைக் கண்ட வான்கோழியானது தானும் மயிலென்று நினைத்துக்கொண்டு தன் பொல்லாச்

சிறகை விரித்தாடுவது வழக்கமாக இருக்கிறது. ஆயினும் மக்கள் மயிலைக் கண்டு சந்தோஷப்பட்டு அதைப் பாராட்டுவார்களே யொழிய வான்கோழியை எவரும் பொருட்படுத்த மாட்டார்கள். அதுபோல தேசத்தின் விடுதலைக்காகவும், ஏழைமக்களின் நலத்துக்காகவும் அல்லும் பகலும் பாடுபடும் காங்கிரஸ் மகாசபை வரப்போகும் தேர்தலில் ஈடுபடத் துணிந்து அதற்காக மயிலின் அழகிய தோகையைப்போன்ற தேர்தல் விக்ஞாபனத்தை வெளியிட்டது. காங்கிரஸ் தேர்தல் அறிக்கையைத் தேசத்திலுள்ள பலரும் பாராட்டுகின்றார்கள். தேசமகாஜனங்கள் காங்கிரசையே ஆதரிப்பதென்று கங்கணங் கட்டிக்கொண்டிருக்கின்றனர். ஆங்காங்கு காங்கிரஸ் கமிட்டிகளும், காங்கிரஸ் ஊழியர்களும் தேர்தல் வேலையைச் செய்ய ஆரம்பித்தாகி விட்டது. இந்த சமயத்தில் தேசீய வேலைக்கு முட்டுக்கட்டை போடுவதையும், சர்க்கார் தாசர்களாக இருப்பதையுமே தங்கள் கொள்கையாகக் கொண்டிருப்பவர்களும், சென்ற பதினைந்து வருஷகாலமாக அதிகாரத்தில் இருந்தும் பாமர மகாஜனங்களுக்கு எவ்வித நன்மையையும் செய்ய முடியாமற் போனவர்களுமான ஜஸ்டிஸ் கட்சியினரும் தங்கள் கட்சியின் எதிர்கால வேலைத்திட்டத்தைப் பற்றியும், தங்கள் நோக்கங்களைப்பற்றியும் ஒரு அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள். இது மயிலின் அழகிய தோகையின் முன் வான்கோழியின் சிறகு இருப்பதைப்போலவே காணப்படுகின்றது. முன்பு தோழர். ராமசாமி நாயக்கர் ஈரோட்டில் காங்கிரஸ் தீர்மானங்களை யொட்டி ஒரு திட்டத்தை போட்டு ஜஸ்டிஸ் கட்சிக்குக் கொடுத்தார். அது இப்போது இருக்கிற இடம் தெரியவில்லை. தற்சமயம் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்கள் பலரும் கூடி ஆலோசித்து காங்கிரஸ் தேர்தல் விக்ஞாபனத்தைப் போன்றதொரு அறிக்கையைத் தாங்களும் வெளியிட்டிருக்கிறார்கள். இவை இரண்டும் தோற்றத்தில் ஒன்று போலக் காணப்படலாம். ஆனால் பொருளில் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசம் இருக்கின்றது. தங்கள் அறிக்கையில் அவர்கள் குடிசைத்தொழில்களை ஆதரிப்பதாகக் கூறுகிறார்கள். சுதேசி சாமான்களையும், கிராமங்களில் தயாரிக்கப்பட்ட பொருள்களையும் உபயோகிப்பது நாகரிகமல்லவென்று கருதும் மேதாவிகள் அநேகமாக அக்கட்சியில் இருக்கின்றனர். இப்படிப்பட்டவர்கள் குடிசைத் தொழில்களை ஆதரிப்பார்களா? தொழிலாளர் நலத்துக்காகப் பாடுபடப் போவதாகக் கூறுகிறார்களே. இவர்கள் சமீபத்தில் சென்னை சட்டசபையில் ஸ்ரீ. பாகதேவ் கொண்டுவந்த தொழிலாளர் பாதுகாப்பு மசோதாவை ஏன் ஆதரிக்கவில்லை? இவ்வாறே அவர்களின் அறிக்கையை ஆராய்ச்சி செய்துகொண்டே போனால் ஒன்றுகூட ஊத்துக்கு நிற்காதென்பது திண்ணம். மயிலின் தோகையும் வான்கோழியின் சிறகும் ஒன்றல்ல என்பதை மாகாணவாசிகள் நன்கு அறிந்துகொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் அறிவோம்.

---

## கோஷம் வேண்டாம்; காரியம் தேவை

காங்கிரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால் நேரு சமதர்மக் கொள்கையையே லக்ஷியமாகக் கொண்டவர். அதனால்தான் உலகத்தின் கஷ்டங்கள் தீரும் என்பது அவரது முடிந்த அபிப்பிராயம். சமதர்மம் என்பது என்ன

என்பதையும் நன்கு அறிந்து கொண்டிருக்கிறார். ஆனால் மற்ற சமதர்மி களைப்போல அவர் அத்துடன் நின்றுவிடவில்லை. சமதர்மக் கொள்கையை இந்தியாவின் பாமர மக்களிடையே எப்படி புகுத்துவது என்பதைப்பற்றி யும் தீர ஆலோசித்து வருகிறார். சமதர்மம் சம்பந்தமான சில சொற்களை யும், சில ஆர்ப்பாட்டமான விவாதங்களையும் உபயோகித்தால் படித்தவர்க ளாகியும், அதில் ஈடுபட்டவர்களாயுமுள்ள சிலருக்குத்தான் இனிமையாக இருக்க முடியும். பாமர மக்கள் அதை உணர்ந்துகொள்ள மாட்டார்கள். அவர்களுக்கு வறுமையும் பசியும்தான் தெரியும். அதை உடனே நிவர்த்தித்து அரைவயிற்றுக் கஞ்சிக்கேனும் வழி செய்தால் அதை அவர்கள் வரவேற்பார் களே யொழிய, பெரிய லக்ஷியத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பதை அவர்கள் சட்டை செய்ய மாட்டார்கள். ஆதலால்தான் மகாத்மாவின் வேலைத் திட்டத்துக்கும் கொள்கைக்கும் கிராமங்களிலும்கூட விரைவில் ஆதரவு கிடைக்கின்றது. ஸ்ரீ. எம். என். ராய் கூறுவதுபோல் மகாத்மாவும் ஒருவித புரட்சிக்காரரே என்பதில் ஐயமில்லை. இதைச் சரிவர உணராத வாலி பர்கள் தாங்களே தீவிர மாறுதலை விரும்புகிறவர்கள் என நினைத் துக் கொண்டு ஏதேதோ ஆர்ப்பாட்டங்களைச் செய்கிறார்கள். ஆனால் சமதர்மக் கொள்கையை ஒருவாறு பிரசாரம் செய்வது தவறல்ல. ஆயி னும் அவசரப் படாமல் அதை நிதானமாக, அதுவும் காங்கிரசின் மூலம் தேச மக்களிடையே புகுத்த வழி செய்ய வேண்டும். இதைத் தான் பண்டித ஜவஹர்லால் செய்து வருகிறார். சமீபத்தில் பெய்ஸ் பூரில் ஸ்ரீ. ஜெயப்பிரகாச நாராயணா தலைமையில் கூடிய சமதர்மிகள் மகா நாட்டுக்கும் பண்டிதர் இச் செய்தியையே அனுப்பினார். காங்கிரசில் தீவிர வாதிகள் சிலர் இருந்து கொண்டு காங்கிரஸ் லட்சியமும் வேலைத் திட்டமும் பிற்போக்கை யடைந்து விடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டியது மிக அவசியமே. ஆயினும் தீவிர வாதிகள் செயலில் கொண்டு வர முடியாத பல பிரச்னைகளைக் கிளப்பிக் காங்கிரசின் அந்தஸ்தையும் நிலைமையையும் கெடுத்து விடக்கூடாது. கோஷத்தை விடச் செயலே அவசியம் தேவையானது. ஏகாதிபத்ய எதிர்ப்பு மனப்பான்மையுடைய அனைவரும் காங்கிரசில் ஒற்றுமை யாக இருந்து தேசிய சுயேச்சையை அடைய மார்க்கம் தேடி விட்டால் பின் னர் நம் சமூகத்தை நல்ல முறையில் அமைத்துக் கொள்ளலாம் என்பதே பெரியோர்கள் கருத்து. ஆதலின் நாம் அனைவரும் தேசிய சுயேச்சைக்கா கப் பாடுபடுவோமாக.



# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

தாது௵ தைமீ—கலியுகாதி 5038, சாலிவாகனம் 1859,
பசலி 1346, கொல்லமாண்டு 1112, ஹிஜரி 1355,
இங்கிலீஷ் 1937௵ ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தை | ஜனவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | வியா | துதி37-48 | திரு29-0 | சித்60 | கரிநாள், பொங்கல், சங்கராந்தி பண்டிகை, உத்தராயண புண்யகாலம் |
| 2 | 15 | வெள் | திரி35-30 | அவி 28-30 | சித்60 | கரிநாள், மாட்டு பொங்கல் |
| 3 | 16 | சனி | சது32-25 | சத27-8 | அ27-8மா | மாச சதுர்த்தி விரதம், கரி |
| 4 | 17 | ஞா | பஞ்28-40 | பூர25-0 | சித்25-0அ | 9க்குள் மழை [நாள் |
| 5 | 18 | திங் | சஷ்24-18 | உத்22-23 | சித்60 | சஷ்டி, விவாகம், சீமந்தம் |
| 6 | 19 | செவ் | சப்19-38 | ரே19-20 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 7 | 20 | புதன் | அஷ்14-35 | அஸ்16-8 | மா16-8சி | கும்பாயனம் நா-24-35 |
| 8 | 21 | வியா | நவ9-18 | ப✻12-25 | சி12-25மா | தை கிருத்திகை |
| 9 | 22 | வெள் | தச3-55<br>ஏகா59-48 | கிரு8-45 | சி8-45மா | ஸ்மார்த்த ஏகாதசி, அவமாகம் [துவாதசி |
| 10 | 23 | சனி | து53-18 | ரோ5-5 | அமி5-5சித் | வைஷ்ணவ ஏகாதசி கூர்ம |
| 11 | 24 | ஞா | திர48-18 | மிரு1-33<br>திரு58-23 | சித்60 | பிரதோஷம், அவமாகம், வித்தியாரம்பம செய்ய |
| 12 | 25 | திங் | சது43-55 | புன55-48 | அ55-48சி | சுப மூகூர்த்தம் செய்ய |
| 13 | 26 | செவ் | ○40-13 | பூச54-3 | சித்60 | பௌர்ணமி, தைபூசம் |
| 14 | 27 | புதன் | பிர37-50 | ஆயி53-25 | சித்60 | |
| 15 | 28 | வியா | துதி36-43 | மக54-13 | அ54-13சி | |
| 16 | 29 | வெள் | திரி37-3 | பூர56-25 | சித்60 | |
| 17 | 30 | சனி | சது39-8 | உத60 | மா60 | |
| 18 | 31 | ஞா | பஞ்42-48 | உத்0-23 | அமி60 | |
| 19 | 1937௵ பிப்ரவரிமீ 1 | திங் | சஷ்47-53 | அஸ்5-50 | சித்5-50பி | |
| 20 | 2 | செவ் | சப்54-0 | சித்12-38 | சித்60 | |
| 21 | 3 | புத | அஷ்60 | சுவா20-10 | சித்60 | |
| 22 | 4 | வியா | அஷ்0-38 | விசா27-35 | சித்60 | |
| 23 | 5 | வெள் | நவ6-38 | அனு34-45 | சி34-45மா | |
| 24 | 6 | சனி | தச12-30 | கே40-58 | சித்60 | குளம் கிணறு வெட்ட |
| 25 | 7 | ஞா | ஏகா16-38 | மூல45-40 | அ45-40சி | சர்வ, மத்வ ஏகாதசி, விவாகம், சுப மூகூர்த்தம் |
| 26 | 8 | திங் | து19-5 | பூரா48-43 | மா60 | பிரதோஷம் |
| 27 | 9 | செவ் | திர19-43 | உத்50-3 | அமி50-3சி | மாச சிவராத்திரி, எருவிட |
| 28 | 10 | புத | ச●18-35 | திரு49-38 | சி49-38பி | சர்வத்திர தை அமாவாசை |
| 29 | 11 | வியா | அமா16-8 | அவி47-50 | சி47-50ம | கும்பரவி நா-54-15, வியாதியஸ்சர் மருந்துண்ண |

| | | | |
|---|---|---|---|
| | | | கே |
| சுக் சனி | 2-விரு-ரா<br>2-ரிஷ-கே | | |
| சூரி புத | 4-தனு-புத<br>14-மீன-சுக்<br>26-மகர-புத | | |
| குரு ராகு | | செ | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS.
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.